Registered No. M. 1500. "NAVASAKTI"

# நவசக்தி

| சந்தா விவரம் | ரூ. | அ. |
|---|---|---|
| வருட சந்தா ... | 5 | 0 |
| ஆறுமாத சந்தா ... | 3 | 0 |
| வெளிநாடு—வருடசந்தா | 6 | 0 |

வாரப்பதிப்பு

"எவ்வுயிர்க்கும் அன்பாயிரு"

விளம்பர விகிதம்
பத்தி 1-க்கு வாரம் 1-க்கு ரூபா 7 0
சில்லரை விளம்பரம் 1 அங். 0 8
முன்பணமின்றி விளம்பரஞ் செய்யப்படமாட்டாது.

சிலம்பு க்க | பிரசோற்பத்தி ஆனிமீ நக (17—6—31) புதன்கிழமை | பரல் ந௦

பார்வதிதேவியார்
பனுவல் திரட்டு
விலை அணா 2.

வள்ளிகாந்தன்
தோத்திர மஞ்சரி
விலை அணா 8.

## ஸ்ரீமத்-குமரகுருதாச சுவாமிகள் இயற்றிய நூல்கள்

| | ரூ. | அ. |
|---|---|---|
| சிவஞானதீபம் 2-ஆம் பதிப்பு | 0 | 8 |
| ஸ்ரீ சுப்பிரமணிய வியாசமும் குருசிட சம்பவ வரலாற்று வியாசமும் 1-ம் பதிப்பு. | 1 | 0 |
| வேதவியாசம் | 0 | 10 |
| சிவயாதனுவியாச மூலமுமுரையும் 2-ஆம் பதிப்பு. | 0 | 11 |
| பத்துப் பிரபந்தம் | 0 | 7 |
| தகராலயரகசியமும், உரையாகிய சதானந்தசாகரமும் | 2 | 8 |
| பரிபூரணானந்தபோதமும் உரையாகிய சிவசூரியப் பிரகாசமும் | 2 | 0 |
| சுத்தாத்வைத நிர்ணயம் | 0 | 3 |
| திருப்பாவும், உரையாகிய திட்பமும் குறிப்புரையும் | 10 | 0 |
| ஸ்ரீமத் குமாரசுவாமியம் | 5 | 0 |
| செக்கர்வேள் செம்மாப்பும், செக்கர்வேளிறுமாப்பும் | 0 | 6 |
| சிறு நூற்றிரட்டு 6-ஆம் பதிப்பு | 0 | 6 |
| குமரவேள் பதிற்றுப்பத்தந்தாதி 3-ம் பதிப்பு | 0 | 2 |
| குமரகுருதாச சுவாமிகள் பாடல், திருவலங்கற்றிரட்டு 1-ஆங் கண்டம், திருவலங்கற்றிரட்டு 2-ஆங் கண்டம் முதலியன அடங்கிய நூல் | 3 | 8 |
| அமைதியைம்ப தென்னுஞ் சேந்தன் செந்தமிழ் | 0 | 2 |
| சண்முக சகச்சிரநாமார்ச்சனை | 0 | 4 |
| செவியறிவுறூஉ | 0 | 1½ |
| ஷை காலிகோ பைண்டு | 0 | 2½ |
| ஸ்ரீமத் - குமரகுருதாச சுவாமிகள் சரித்திரம் | 0 | 8 |
| ஷை சரித்திரம் காலிகோ | 0 | 12 |

## ஸ்திரீதனம்

ஹிந்துக்களின் வழங்கும் ஸ்திரீதன சட்ட புத்தகம், ஸ்மிருதிகளினுடையவும், ஹைக்கோர்ட்டுகளின் கேசுகளினுடையவும் சாராம்சம் அடங்கியுள்ளது.

விலை அணா 8. தபாற் கூலி வேறு.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

## திருமூலர்

மண்ணொன்று கண்டீர் இருவினைப் பாத்திரந்
திண்ணென் றிருந்தது தீயினைச் சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணவைபோல்
எண்ணின்ற மாந்தர் இறக்கின்ற வாறே.

பண்டம்பொய்க் கூரை பழகி விழுதலால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி யவருடன் வழிநட வாதே.

ஊரெலாங் கூடி யொலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே.

## பாராயண நூல்கள்

## தேவி தோத்திர மஞ்சரி

தாயுமான சுவாமிகள், சிவப்பிரகாச சுவாமிகள், குமரகுருபர சுவாமிகள், இராமலிங்க சுவாமிகள், சிவஞான சுவாமிகள், அபிராமி பட்டர் முதலிய ஆன்றோர்கள் அருளிச்செய்த பாடல்களும், சௌந்தரியலகரி, ஆனந்தலகரி, சக்திகவசம் முதலிய பல நூல்களினின்றும் திரட்டிய தேவி தோத்திரங்களும் அடங்கிய அரிய நூல். நல்ல காகிதத்தில் அச்சிடப் பட்டது. விலை அணா 4.

5 அணா தபால் முத்திரை அனுப்புவோர்கட்கு ஒரு புத்தகம் அனுப்பப்படும்.

| | | | | |
|---|---|---|---|---|
| விநாயகர் பனுவல் திரட்டு | ரூ. | 0 | 6 | 0 |
| முருகவேள் பனுவல் திரட்டு | ,, | 1 | 0 | 0 |
| முருகன் திருவருட்பா | ,, | 0 | 8 | 0 |
| அப்பர் புகழ்மாலை | ,, | 0 | 4 | 0 |
| சுந்தரர் புகழ்மாலை | ,, | 0 | 4 | 0 |

மேற்குறித்த பாராயண நூல்கள் எல்லாவற்றையும் ஏக காலத்தில் வாங்குவோர்க்குத் தபாற் செலவின்றி மணியார்டர் கமிஷன் கழித்து வி. பி. யில் அனுப்பப்படும்.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

3 - திருமுறைகள்
[அடக்கவிலைப் பதிப்பு]

டபிள் கிரவுன் 16 - பக்க அளவில் நல்ல கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டது. 550-பக்கங்களுக்கு மேலுள்ளது. விலை அணா 10. தபால் செலவு வேறு.

## சுந்தரர் தேவாரம்

அடக்கவிலைப் பதிப்பு
விலை அணா 4.

தனிப்பிரதி வேண்டுவோர் 6 அணா ஸ்டாம்பு அனுப்பவேண்டும்.

ஐந்து ரூபாய்க்கு 25 புத்தகங்கள்.
வி. பி. தபால், பார்சல் செலவு வேறு.

முருகவேள் புத்தகசாலை,
இராயப்பேட்டை, சென்னை.

பெரிய தலைவன் யார்?
எல்லா டானிக்குகளுக்கும் நம்முடைய

## மதனமஞ்சரி

மாத்திரையே

பெரிய தலைவன். இது பலயீனம், மலச்சிக்கல், ஞாபகக்குறைவு, நரம்புகளின் தளர்ச்சி, இந்திரியஸ்கலிதம் முதலியவியாதிகளைக் கண்டித்து, தேகத்தை வஜ்ரசரீரமாக்கி விடுகின்றது. இதை விடாமல் 3 டப்பிகள் உபயோகித்தால் இதில் கூறப்பட்டிருக்கும் வியாதி எதுவாயிருந்தாலும்பரந்தோடிவிடும். ஒரு டப்பி விலை ரூபா 1.

இனம்! வைத்தியா வித்தியா இனம்!!
விபரம் வேண்டுவோர்
எழுதிப்பெற்றுக் கொள்ளலாம்.

மதனமஞ்சரி பார்மசி,
1/94, சைனுபஜார் ரோட், மதராஸ்.

## பிரபல ஜோதிஷர்

மஹாராஜாக்களாலும், ஆயிரக்கணக்கான பிரபுக்களாலும் தங்கமெடல்களும் நற்சாட்சிப் பத்திரங்களும் பெற்றவர். ஒரு ஜாதகம் கணிக்க ரூபா 2. நேரில் ஒரு ஜாதகம் பார்க்க ரூபா 5. 1 வருஷ பலன் எழுத ரூபா 5. எதிர்காலத்தைப்பற்றின 3 கேள்விகளுக்கு ரூபா 1. மேல் கேள்வி 1 க்கு அணா 8 (ஜாதகம் அல்லது எழுதும் நேரம் தேவை)

பண்டித காழியூர் :
ம. ஸ்ரீனிவாசாச்சாரியார்,
'ஸ்ரீநிவாஸ்' 218, தங்கசாலை வீதி, மதராஸ்.

நல்ல உணவு வேண்டுமானால் தீர்மானித்துக் கொள்ளுக. ஏனெனில் சமயலை எப்பொழுதும்

# ருக்மணி குக்கர்

அடுக்கில் செய்தால்தான் சாப்பாடு நன்றாயிருக்கும். 1, 2, 4, 6, 8, 12, 16 பேர்களுக்குரிய ஏழு அளவு கள் ரூபா 12, 16, 20, 25, 31, 37, 44-ல் உண்டு.

விபர புத்தகம் இனாம்.

ருக்மணி குக்கர் கம்பெனி, (3) இராயபுரம், சென்னை.

# பண்டித மோதிலால் நேரு

இப்பெரியாரது அரிய சரித்திரம், இந்தியத் தலைவர்களின் புக முரைகள்; இந்திய மேனாட்டுப் பத்திரிகைகளின் புகழுரைகள்; பண்டிதரின் வீரமொழிகள் ஆகிய இவைகள் பொதுள மிகவும் அழ காய் எழுதப்பட்டது; உயர்ந்த கடிதத்தில் அச்சிடப்பட்டுக் கண் கவரும் அபூர்வமான 33 போடோ படங்களுடன் கூடியது; "தமிழ் நாடு" ஆசிரியர் டாக்டர் பி. வரதராஜலு நாயடு அவர்களின் சிறப் புரை கொண்டது.

விலை அணா 12. 5 பிரதிகளின் விலை ரூபா 3.

ஒரே பிரதிக்கு ஆர்டர் செய்வோர் 14 அணா ஸ்டாம்பு அனுப்பவும்.

"விவேக போதினி" ஆபீஸ்,

மயிலாப்பூர், சென்னை.

# ஜோதிஷ தரங்கிணி

(இதனைக் கற்போர் எவரும் இரண்டு மாதங்களில் பெரும் ஜோதிஷராவர்)

ஆசானின் உதவியின்றி யெவரும் ஜோதிஷ சாஸ்திரத்தை எளிதில் கற் றுத் தெளிந்து பலாபலன்களை நிச்சயித்துக் கூறும் வழிகள் பொதிந்துள்ள ஜோதிஷ சாஸ்திர நூல்கள் பலவற்றுள் காணப்படும் இரகசியங்களின் தன்மை யடங்கிய விதிகளைச் சுலபமாகச் சிறிதளவிலேயே கற்றுக் கொள்ளுமாறு இது எழுதப் பெற்றுள்ளது. இதனை வாசிப்போர் பலன் சொல்வதற்கு இதனினும் சிறந்த நூல் வேறு ஏதேனு முண்டோ எனக் கருதக்கூடும். பண்டிதர்கள் பலரா லும் மன்னர்களாலும் கொண்டாடப் பெற்றுள்ளது. இதன் விலை ரூ. 1. தபாற் செலவு வேறு. (ரயில்வே ஸ்டேஷன்களிலுள்ள புக்ஸ்டால்களிலுங் கிடைக்கும்.)

"நவசக்தி"—இந்நூலின் முகவுரை எமக்குக் களிபேருவகை யூட்டியது. சோதிட சாஸ்திரம், உலகத்திலுள்ள எல்லா நாட்டினராலும் அங்கீகரிக்கப்பட்டு, நீண்டகாலமாக அநுஷ்டானத்திலிருந்து வந்திருப்பதை, ஆசிரியர், முகவுரையில் தெளிவாக எடுத்துக் காட்டி யிருக்கிறார். இம் முகவுரை, சரித்திரக்காரருக்கு நல்விருந் தளிப்பதாகும். சோதிட சாஸ்திரத்தைக் கற்றுக்கொள்ள விழைவோர் முதலில் என்னென்ன கற்றுக் கொள்ள வேண்டுமென்பதும், பொதுவான சில விதிகளும் இந்நூலின் முதற்பாகத்தில் கூறப்பட்டுள்ளன. சுபக் கிரகங்கள் ஏன் கெடுகின்றன வென்பதும், இவற்றின் பின் னைய விளைவுகளும், இன்னோரன்ன பிறவும் இதில் தெளிவுபட விளக்கப்பட் டிருக்கின் றன. இரண்டாவது பாகத்தில், பன்னிரண்டு பாவங்களும், கிரகங்களின் காரகமும், கிரகங்களுக்குள்ள சத்துரு மித்துரு விவரங்களும் சொல்லப்பட் டிருக்கின்றன். நூலின் தமிழ் நடை பாராட்டத்தக்கது. ஆசிரியரின்றி இந்நூல் வாயிலாகச் சோதிடம் பயிற்சி பெறக்கூடும். இம்முறையில் நூலைச் செப்பஞ்செய்த ஆசிரியர் உழைப்புப் பாராட்டற் குரியது. இதுபோல் வேறு பல நூல்களையும் ஆசிரியர் வெளியிட்டு உபகரிப்பர் என்று எதிர்பார்க்கிறோம்.

கிடைக்கும் இடம்:—எஸ். குருகுஹதாஸப் பிள்ளை,

எட்டயபுரம், திருநெல்வேலி ஜில்லா.

இனி இரைப்பு சுவாசகாசத்துக்கு இடமில்லை

ஒரு மகான் கையாண்ட

# இரைப்பு ரக்ஷகன் சுவாசகாச சம்மாரி

இது இரைப்பு சுவாசகாசமென்னும் கொடிய சண்டாள வியாதியை வேரோடு போக்கி விடுகிறது. மேற்கண்ட நோய், தாய் தந்தை வழியாகக் கண் டிருந்தாலும், மேக சம்பந்தமாகக் கண்டிருந்தாலும், எலி கடி நாய் கடி முதலிய விஷத்தால் கண்டிருந்தாலும் இருக்குமிடந் தெரியாமல் பறந்து போகிறது. மூடுபனிக் காலத்திலும், மழைக் காலத்திலும், இரவில் கண்விழித்தலாலும் சீதள பண்டங்கள் சாப்பிட்டதாலும் நெஞ்சில் சளி கட்டிக் கொர் கொர் என இழுத்துக்கொண்டு இராக்காலத்தில் வியாதி தாருட்யம் செய்தலால் கடுகளவும் நித்திரை யில்லாமல் கண்ணீருங் கையுமா யிருப்பவர்கள் பூரண சுகம் பெறு வார்கள். 12 மாத்திரை கொண்ட புட்டி ரூபா 10. 6 மாத்திரையுள்ள புட்டி ரூபா 5. 3 மாத்திரையுள்ள புட்டி ரூபா 3. இது ஆண் பெண் சிறுவர் ஆகிய எல்லோருக்கும் ஏற்றது.

நற்சாட்சிப் பத்திரங்கள்

டாக்டர் ஆர். எஸ். ராசப் பிள்ளை, ஐ. எம். டி., c/o மெஸ்ஸர்ஸ் எட்வர்ட் அண்டு கோ., கெமிட்ஸ், சிக்பட, பெங்களூர் சிட்டி, 12—10—28-ல்:— பண்டிட் அவர்களுக்கு, எனது சிநேகிதருக்காக நான் தங்களிடம் வரவழைத்த 6 மாத்திரைகள் நல்ல குணம் செய்தன. உடனே 6 மாத்திரைகள் வி. பி. மூலமாக சீக்கிரம் அனுப்புங்கள்.

மிஸஸ். நாயுடு, போஸ்ட் மிஸ்ட்ரஸ், டங்கு பஜார், போஸ்ட் ஆபீஸ், இரங்கூன், 19—1—29-ல்:—கனம் பண்டிதரே, தாங்கள் வெளியிட்ட மாத் திரையைச் சாப்பிட்டேன். வெகு சுகமாயிருக்கது. அநேகமாய் இந்த வியாதி யுள்ளவர்களுக்குத் தங்கள் மாத்திரையை வரவழைத்தும் கொடுத்துக் கொண்டும் வருகிறேன். தற்போது இந்நோய் கொஞ்சம் தலைகாட்டியிருப்பதால் உடனே 12 மாத்திரைகள் வி. பி. மூலமாக அனுப்பி வைக்கவும்.

வி. ஏ. எம். சுவாமி பண்டிட், நெ. 102, பிராட்வே, சென்னை.

திருப்போரூர்ச்

சந்நிதிமுறைத்திரட்டும், அரும்பதவுரையும்

கிளேஸ், அணா 5; ரப் அணா 3.

வேண்டுவோர் விலைக்கு மேல் ஒரு அணா தபால் தலை சேர்த்து அனுப்பினால் புத்த கம் அனுப்பப்படும்.

முருகவேள் புத்தகசாலை, இராயப்பேட்டை, சென்னை.

—:வைத்திய ரத்ன:—

பண்டிட். D. கோபாலாசார்லு அவர்களின்

ESTD 1898

# ஜீவாமிருதம்

பலஹீனம், நரம்புத்தளர்ச்சி, மறதி, அயர்வு, வீர்யக்குறைவு, இவைகளைப் போக்கி, தேக பலம், ஞாபகசக்தி, வீர்யவிர்த்தி, இவைகளை அளிப்பதில் இணையற்றது

எல்லா இடங்களிலும் கிடைக்கும். விலை ரூ 3-4-0

ஆயுர்வேதாஸ்ரமம்

தபாற் பெட்டி 287. மதருஸ்.

கேடலாக் இனாம்.

திருவாளர்-திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

இயற்றிய நூல்கள்

# சைவத்திறவு

"தென்னாடுடைய சிவனே போற்றி - எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்னும் உரையைப் பீடிகையாகக் கொண்டு எழுதப்பட்டது.

இந்நூலிடை, மாணிக்கவாசகனார் நிலை, திருவண்டப்பகுதி நுட்பம், நினைப்பற நினைத்தலின் விளக்கம், மூவித உடலங் களின் பாகுபாடு, ஒரே கவுடளுண்மை, "தென்னாடுடைய சிவன் எந்நாட்டவர்க்கும் இறை" என்பது, இறைக்கும் இயற்கைக்கு முள்ள தொடர்பு, சேய்சிவம் என்பது, சம ரசம், இறைவனை புணரும் வழி, இறைவனது சொரூப தடத்த இயல்புகள், காவியங்களின் இன்றியமையாமை, நம்பிக்கையின் அவசியம், ஆராய்ச்சியின் அளவு, சைவத் திறவுள்ள இடம், கடவுளின் அகண்டாகாரப் படம், "தோடுடைய செவியன்" என்பதின் உள்ளுறை, ஆண்ட வன் பெண் ஆண் வடிவமாகவிருக்கும் நுட்பம், தோடு விடை மதி சுடலை முதலியவற்றின் உட்பொருள், கோயில்களின் நோக்கம், தற்காலக் கோயில்கள், சாதிப்பேய், நூல்களுங் கோயில்களே என்பது, தவப்பேறு முதலிய பொருள்கள் சுருங்கிய முறையில் ஆங்காங்கே விளக்கப்பட்டிருக்கின் றன. உருவ வழிபாட்டின் நுட்பமும், இன்றியமையாமை யும் விளக்கமாக இந்நூற்கண் ஓதப்பட்டிருக்கின்றன. இந் நூலைப் படிப்போர்க்கு உருவ வழிபாட்டைப்பற்றிய பல திற ஐயப்பாடுகள் நீங்கும்.

விலை அணா 8.

| | ரூ. | அ. |
|---|---|---|
| மனித வாழ்க்கையும் காந்தியடிகளும் .... | 2 | 8 |
| பெண்ணின் பெருமை அல்லது வாழ்க்கைத் துணை.. | 2 | 0 |
| தமிழ்த் தென்றல் .... | 2 | 0 |
| முருகன் அல்லது அழகு .... | 1 | 0 |
| இராமலிங்க சுவாமிகள் திருவுள்ளம் .... | 1 | 0 |
| என்கடன் பணிசெய்து கிடப்பதே .... | 0 | 8 |
| சைவத்தின் சமரசம் .... | 0 | 8 |
| கடவுள் காட்சியும் தாயுமானாரும் .... | 0 | 4 |
| தமிழ் நூல்களில் பௌத்தம் .... | 0 | 4 |
| சீர்திருத்தம் அல்லது இளமை விருந்து .... | 0 | 8 |
| நாயன்மார் .... | 0 | 3 |
| சைவ சமய சாரம் .... | 0 | 1 |

இந்நூல்கள் எல்லாவற்றையும் ஏககாலத்தில் வாங்குவோருக்குத் தபாற் செலவின்றி, மணியார்டர் கமிஷன் கழித்து வி. பி-யில் அனுப்பப்படும்.

முருகவேள் புத்தகசாலை,

இராயப்பேட்டை, சென்னை.

வந்தேமாதரம்

# நவசக்தி

"என்கடன் பணிசெய்து கிடப்பதே"

சிலம்பு கக • பிரசோற்பத்திஸு ஆனிமீ ௩௨ (17—6—31) புதன்கிழமை பரல் ௩௦

## தெய்வ வழிபாடு

R. V. இராமசாமி

மண்ணிடைப் பிறந்தா ரனைவரும் தேவாதி தேவனுன சர்வேசனைப் போற்றி நிற்க வேண்டுமென்பதே குரு முதலியோர் கற்பிக்குங் கல்வியாகும்.

"அகரமுதல வெழுத்தெல்லாம்
ஆதிபகவன் முதற்றேயுலகு"

எழுத்துக்களெல்லாம் எப்படி அகரத்தைத் தமக்கு முதலாக உடையனவோ அதேபோல் உலகங்களெல்லாம் ஆதியாகிய பரமனை முதலாகக் கொண்டிருக்கின்றன என்பது இக்குறட்பாவின் பொருள். இவ்வுலகத்திற்கு முதற்காரணம் கடவுளேயாம். அவரே உலகினரைப் படைத்தவர்; அம்மக்களைக் காப்பவர். அவரே முடிவில் மக்களனைவரையு மழிப்பவர். அப்பரம பிதாவே மற்றும் இம் மண்ணி லுறைவோர்க்கு எல்லாவித சுகங்களையும் தந்தருளி யிருக்கின்றூர். ஆகாயம் முதல் பிருதிவி ஈருகவுள்ள ஐம்பூதங்களையும், மற்றும் அவற்ருலாய அளவிடக் கூடாத பொருள்களையும் இவ்வுலகத்தில் குறைவற எங்கணும் வியாபிக்கும் வண்ணஞ் செய்பவர் அப்பேரறிவாளராகிய கடவுளேயாவர். உலகில் ஜீவராசிகள் சுகித்து வாழ்வதற்குரிய வழிகளை யமைத்திருப்பதும் அக் கண்ணுதற் பெருங்கடவுளே. அவர் தமது அளவிலாக் கருணையினுலும் வல்லமையினுலும், ஆன்மாக்கள் பெறுதற்கரியமுத்தி நெறியைப் பற்றும்படி வேதங்களையும் ஆகமங்களையும் சிருஷ்டித்திருக்கின்றூர்.

* * *

"எல்லா வுலகமுமானுய் நீயே" என்று அப்பர் சுவாமிகள் கூறியாங்கு, அவர் தம் மாயையாகிய பிரகிருதியாலே இப் பிரபஞ்சத்தைத் தோற்றுவித்து, சூரியனது கிரணத்தால் தாமரை தானே மலர்வதைப் போலவும், நீர் தானுகவே ஆவியாக மாறுவதைப் போலவும் பிரகிருதியிடம் சிருஷ்டியாதி காரியங்களனைத்தையும் நிகழ்த்துவிக்கின்றூர். அவ்வாறு எப்பொருளுடனுங் கலந்து நின்று அவ்வப் பொருளாகத் தோன்றினும் எப்பொருளுமாகாது, நீரினுட் கிடக்கும் நெட்டியைப்போல் ஒன்ருேடுங் கலவாது தனித்தே நிற்கின்றூர். அவரது செய்கையை எவ்வாறு முற்றினும் கூற இயலும்? அவர் மனவாக்குக் கெட்டாத வான் பொருளர்; ஆதியந்த நடுவேது மிலாத சோதியர்.

"உடலா யுயிரா யுலகமதாகிக்
கடலாகிக் கார்முகினீர் பொழிவானுகி
யிடையாயுலப் பிலியெங்குந் தானுகி"

நிற்பவர், நித்தியர், நிர்மலர், நிட்களங்கர், நிராமயர், பரிபூரணர், நீங்காசுத்தர், சச்சிதாநந்தர், சமயாதீதர், அருமறையின் சிரப்பொருளர், எப்பொருட்கும் எவ்விடத்தும் பிரிவற நின்றியக்கஞ் செய்பவர். மலரின் கண் மணத்தைப்போலவும், எள்ளின் கண் எண்ணெயைப் போலவும் கடலின் கண் உப்பைப் போலவும், உயிருக் குயிராகியும் நினைவுக்கு நினைவாகியு மிருப்பவர். மற்றும் "மூவுருவும் ஒருருவாய் நின்ற மூர்த்தி" என்றபடி "ஈன்றளித்தழிக்குஞ் செய்கைக் கேதுவாய், மயனுமாலாய் ஆன்ற வீசனுமாய்த் தானே ஆனந்த மூர்த்தியுமாய்" நிற்பவர். என்னே அவரது ஆற்றல்! என்னே அவரது பெருமை!

* * *

அவ்வாறு, 'பகர்வனவெல்லாமாகியும் அல்லவாகியும்' நிற்பினும், அவரேதாம் படைத்துள்ள சிருஷ்டிகளின்மூலமாய்த் தம்மைக் காட்டி ஆன்மாக்களை இன்ப வீடடையும்படி செய்கின்றூர். இத்தகைய பேருதவிகளை நித்தலும்செய்துவரும் தேவர்க்கு நரர்கள் என்ன கைம்மாறு செய்யவல்லார்! அவர் கற்பித்த வழிகளைக்கடைப்பிடித்தொழுகி அன்னவரை மனம் வாக்குக் காயத்தால் வழிபட்டு நிற்றலே சாத்தியமானதாகும்.

* * *

முயற்சியானது மெய்வருந்தக் கூலி தந்த போதிலும், 'திருவினை' ஆக்கிய போதிலும், தெய்வ பலத்தாலன்றி எந்தக் காரியமும் கைகூடாது. 'அவனன்றி ஓரணுவும் அசையா' தென்பது முதுமொழி யன்ருே? ஒருவனுக்குத் தெய்வ பலமென்பதில்லையாயின் அவன் நினைத்த காரியம் வேருகத்தான் முடியும். 'எல்லாம் தெய்வச் செயல்' என்பதும் 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்த' தென்பதும் இக்கருத்துபற்றியே. தெய்வச் செயலை அறிய யாரால் முடியும்? மனிதர்கள் படும் கஷ்ட சாத்தியங்களை அவரே சுலப சாத்தியங்களாக்க வல்லார். அபாயத்தைக் கொடுப்பவரும் அவரே. அவ்வபாயத்தினின்றும் நீக்குவித்து நலப்பாடு அடையச் செய்பவரும் அவரே.

* * *

இவ்வாருய ஞானப் பரம்பொருளை என்றும் மறவாது, அவரது தாமரைத் தாள்களைத் தூமலர் தூவித் துத்தித்துவரும் பக்தர்கள் எக்காலத்தும் எச்சமயத்தும் எவ்விதத் துன்பமும் அநுபவிக்க வேண்டுவ தில்லையாகும். என்றும் நிலைத்து நிற்கும் மோக்ஷ வின்பங்களைச் சதா அநுபவிக்க இடமுண்டாகும். பக்தி பண்ணிக் கொண்டிருந்தாலன்ருே முக்தி பெறலாம்? அதுவன்ருே உற்ற யாக்கையின் உறுபயன்.

"கற்றதனுலாய பயன் என்கொல்? வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்?" [றிவன்

சிவ சொரூபத்தைக் காணுத கண்ணுமொரு கண்ணே? எம்பெருமானின் திருநாமத்தை நவிலாது சாக்குப் போக்குப் பேசிச் சண்டித்தனஞ் செய்யுமவர் நாவுமொரு நாவோ? அல்லும் பகலுமற்ற ஆனந்தப் பேரொளியைக் கும்பிட்டிறைஞ்சாத கையுமொரு கையோ? வேதபுராணங்களைக் கற்றுத் தேறியும் பொன்னம்பல நாதனிடம் ஏகாந்தபக்தி கொள்ளாதவ னுள்ளமென்ன கல்லோ? அக்கடைமகன் துன்பந்தான் தொலையுமோ? அன்றி, அவனுக்கு இன்பந்தான் வாய்க்குமோ?

* * *

சிவபெருமானிடத்து அடைக்கலம் புகுந்தாலன்ருே அவரது திருவடி நீழலையடைய இயலும்?

எனவே,

"உலகெனும் கொடு வெங்கானில்
உணர் வெனும் அணிகோட்பட்டே
அலைசெய்காமாதி வேடர்க்
கடிமையாய் அலக்கணுற்று"

தியங்கித் திரியாமல், அத்தேவாதி தேவனை, மனதால் நினைத்து, கண்ணுல் தரிசித்து, கைகளால் தொழுதேத்தி, தலையால் வந்தனை செய்து, நாவால் துதித்து, பக்திப்பெருக்கால் கைகுவித்து மெய்சிலிர்த்து, உடல் குழைய, மொழி குழற, அனலி லிட்ட வெண்ணெ யென மனம் நெக்குருகப் பாடியாடிப் பணியவேண்டும். அவ்வாறு ஒருவன் பணிவானுயின், அவன் "கடவுளை நம்பினோர் கைவிடப்படார்" என்ற நியதிப்படி, அக்கடவுளால் என்றுங் காப்பாற்றப் படுவானென்பது உறுதியே. தன்னைத் தஞ்சமென் றடைவோரை அவர் அஞ்சலென ஆதரித்து அவர்க்குச் சகல பாக்கியங்களையுந் தந்துதவுவார்.

* * *

முதலைவாயிலகப்பட்ட கஜேந்திரன் 'ஆதிமூலமே' என்றழைத்ததன் நிமித்தமாக, முதல்வனும் அக்கடவுள், தன் வாகனத்திலேறிச் செல்லினும் காலதாமத மாகுமெனக் கருதி அதையும்விடுத்தொழித்து அதிவேகமாய்ஓடிச் சென்று முதலையைக் கொன்று கஜேந்திரனைக் காப்பாற்றினு ரென்பது புராணக் கதையன்ருே? மற்றும் மார்க்கண்டேயனென்ற சிறுவன் தான் கொண்ட தெய்வபக்தியால் என்றுஞ் சிரஞ்சீவியாக வாழ்ந்துவர வரம் பெறவில்லையா? அவனது பக்திக் கனலாலன்ருே மறலியு முயிர் நீத்தனன்? திண்ணனர் என்ற திருநாமம் பூண்ட வேடுவ மைந்தன் கண்ணிடந்து அப்பிய காரணத்தால், திருக்காளத்தியப்பன், அவன் முன்னிலையிற்ருேன்றி அவனை ஆசீர்வதிக்கவில்லையா? எட்டு மிரண்டும் இன்னதென்று அறியாத பாலனும் துருவன், அஞ்சாநெஞ்சு படைத்து, சிங்க முதலிய கொடிய மிருகாதிகள் சஞ்சரித்திடும் வெங்கானத்திடை சென்று கடுந்தவ மியற்றித் திருமாலைக் கண்டு பெருமைப்பட்டதும் பொய்த்துப் போமா? சொல்லுதல் யார்க்கும் எளிதே ஆயினும், சொல்லியவண்ணம் செய்தலன்ருே மேலானது. அப்பெரியார் பக்தி பூண்டு கடைத்தேறியாங்கு மக்கள் யாவரும் கடைத்தேற வல்லவோ முயலவேண்டும்?

* * *

ஆதலின், கடவுளின் அருட்பேறுன செல்வத்தை யடைய வேண்டுமானுல், பேரின்ப வாழ்க்கையை அநுபவிக்க வேண்டுமானுல், அஞ்ஞானஇருள்நீங்கப் பெறவேண்டுமானுல், அரும்பெற லாக்கையைப் பெற்றதன் பயனை அடைய வேண்டுமானுல், இனிப் பிறவாதிருக்க வேண்டுமானுல், "காலன் வருமுன்னே, கண் பஞ்சடையு முன்னே, பாலுண் கடைவாய்ப் படுமுன்னே தன்மேல் உற்ருர் விழுந்தே அழுமுன்னே, ஊாரனைவரும் ஒருங்கே திரண்டு மயானத்தே இட்டுச் சுடுமுன்னே" ஏகம்பவாணனைப் போற்றிசைத்து இனிது வாழ்வதே உத்தமம்.

"பெற்றதாய் தனைமக மறந்தாலும்
பிள்ளையைப் பெறுந்தாய் மறந்தாலும்
உற்ற தேகத்தையுயிர் மறந்தாலும்
உயிரைமேவிய உடல் மறந்தாலும்
கற்ற நெஞ்சகங் கலை மறந்தாலும்
கண்கணின் றிமைப்பது மறந்தாலும்
நற்றவத்த ருள்ளிருந் தோங்கு
நமச்சிவாயத்தை நான் மறவேனே"

என்ற பக்தி வைராக்கியம் கொண்டிடினன்ருே முக்திவாழ்வு சித்திக்கும்? 'சிவாய நமவென்று சிந்தித்திருப்போர்க்கு அபாயமொரு நாளுமில்லை' என்பர். அச்சிவநாம உச்சாரணையொன்றே சகலப் பேற்றினையும் தந்துதவுமென்

பதி லெட்டுணை ஐயமுமில்லை. திருமங்கை யாழ்வாரும்,

"குலந்தரும், செல்வந் தந்திடும்
அடியார் படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் : நீள்விசும்பருளும் ;
அருளொடு பெருநில மளிக்கும் ;
வலந்தரும் ; மற்றுந் தந்திடும் ; பெற்ற
தாயினும் ஆயின செய்யும் ;
நலந்தருஞ்சொல்லை நான் கண்டுகொண்
நாராயணா என்னும் நாமம்" [டேன்

என பக்தி பரவசத்துடன் பாடியுள்ளார்.

* * *

நாரணனென்றும், சிவனென்றுங்கூறி நிற்பாராயினும் தெய்வ மென்பதொன்றே. முன்னர்க் கூறியவாறு முழுமுதற் கடவுள் ஒருவரே. சிருட்டி, திதி, சங்கார நிமித்தம், பிரம்ம விஷ்ணு ருத்திரர்களாகி யிருப்பதுமன்றி, தானே பலவிறந்த மூர்த்திகளாயும் நிற்கின்றார். ஆதலின் 'எந்தெய்வம் உந்தெய்வம்' என்று வழக்காடி நிற்றல் வீண் அறியாமையே யன்றி வேறன்று. அது அஞ்ஞான மதவைராக்கியமாகும். எச்சமயத்தார் வழிபடு தெய்வமும் ஒரு தெய்வமே. பௌத்தர் புத்தரென்றும், கிறிஸ்தவர் ஏசுவென்றும், சைவர் சிவனென்றும், வைணவர் நாரணனென்றும், இன்னம் பல மதத்தவரும் பலப்பல விதமாகக் கூறியழைப்பதனைத்தும் அவ்வேக நாதனையே குறிக்கும். ஒவ்வொரு மதமும் அக்கடவுளை அடைவதற்கென ஏற்படுத்திய மார்க்கமாகும். எப்படி நதிகள் பலவாகவிருக்க, அவையனைத்தும்முடிவில் கடலொன்றில் சங்கமமாகின்றனவோ அதைப்போலவே எம்மார்க்கமும் முடிவில் ஒன்றுகிய அக்கடவுளையே வந்தடைகின்றது. ஆதலின், அக்கடவுளுக்கு எம்மதமும் சம்மதமே. எவ்வாறு சூரியனது ஒளி ஒரே நிறத்ததாயிருக்க, அது கண்ணாடியில் பல வர்ணங்களாகத் தோற்றுகின்றதோ அதுபோலவே ஏக சொரூபியாயிருந்தே அவர் ஒவ்வொரு மதத்தின் கண்ணும் ஒவ்வொரு விதமாகத் தோன்றுவார்.

—"ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்"



## சம்பந்தரின் வானநூற் கல்வி

ஸ்ரீமதி E. T. சொக்கம்மாள் B. A. L. T. அவர்கள் "சித்தாந்த"த்தில் எழுதிய கட்டுரை வருமாறு :—

### 1. சம்பந்தர் காலத்திய வானநூல்

திருஞான சம்பந்தர் பிறப்பிடமாகிய சீர்காழிக்குப் பன்னிரண்டு திருநாமங்கள் உண்டென்று புகலி வேந்தரே சில பதிகங்கள் பாடி யிருக்கின்றார். அவற்றுள் "தோணிபுரம்" என்பது ஒன்றும். "தோணி" என்பது மரக்கலம். அதாவது பாய் விரித்து ஓடுங் கப்பல். இக்காலத்தில் புகைக் கப்பல் போல் நீராவிச் சக்தியால் ஓடாது, இது காற்றின் ஓட்டத்தாற் செல்லும். இது காற்றிற்கு எதிர்ப் பக்கத்தில் மாத்திரம் செல்லாது, ஏனைய மூன்று பக்கங்களிலும் செல்லும். அக்காலத்தில் மரக் கலங்கள் ஓட்டும் மாலுமிகள் இக்காலத்திலுள்ள திசைக்காட்டி முதலிய கருவிகள் துணையின்றிக் கோளங்களின் சாதக நிலையாலே, திசை, தூரம் முதலியன கண்டு வணிகம் நடத்தினர். ஆயினும் சிறுபான்மை கடற் பிரயாணம் அபாயமாகவே யிருந்தது என்பதை அடியிற் காணும் அப்பர் பாசுரத்தால் அனுமானிக்கலாம்.

"மனமெனுந் தோணி பற்றி
மதியெனுங் கோலை யூன்றிச்
சினமெனுஞ் சரக்கை யேற்றிச்
செறிகட லோடும் போது
மதனெனும் பாறை தாக்கி
மறியும்போ தறிய வொண்ணா
துனையுனு முணர்வை நல்காய்
ஒற்றியூ ருடைய கோவே!"

—அப்பர் - திருவொற்றியூர் - திருநேரிசை.

ஆகையால் வான நூலில் அதிக சூட்சும அறிவு பெறுவது சம்பந்தர் காலத்தில் மாலுமிகளுக்கு இன்றியமையாததாயிருந்தது. மாலுமிகளின் அறிவு பெரும்பாலும் யாவருக்கும் உலகத்திலும் வெளிப்படையாகக் காணப் பட்டதாம். ஆகையால் சம்பந்தர் காலத்தில் வானநூல் அறிவு சாதாரணமான மனிதரும் பெற்றிருந்தார் என்பது, அக்காலத்திய பயிர்த் தொழிலாளிகள் பஞ்சங்களின் காரணத்தை அறிந்து அவற்றைத் தடுத்துப் பூமியில் சிறந்த விளைவு செய்து உலகத்தோரை உய்வித்ததால் விளங்கும். சம்பந்தர் தேவாரத்திலுள்ள சிற்சில பாசுரங்கள் அவர் காலத்தில் வழங்கியிருந்த வான நூல் அறிவின் தன்மையை விளக்கும்.

### 2. வான நூலும் ஜோதிடமும்

திருஞான சம்பந்தர் ஜோதிட சாஸ்திரத்தின் உண்மைகளில் சில நன்குணர்ந்திருந்தார். அதைக் கோளறு திருப்பதிகத்திலுள்ள சில செய்யுட்களினின்றும் அனுமானிக்கலாம். புகலி வேந்தர், பாண்டி நாட்டுக்கு மங்கையர்க்கரசியார் அனுப்பிய வேண்டுகோளுக்கு இணங்கிச் செல்ல எழுந்த காலத்தில் அவருடன் வேதாரண்யத்திலிருந்த அப்பமூர்த்தி "தேவரீர் சிறு பிள்ளையாயிருக்கிறீர். சமணர்களோ வஞ்சகர். தங்களுக்கு இப்பொழுது கிரகங்கள் வலியில" என்று தடுத்தார். அப்போது பாடிய "வேயுறு தோளிபங்கன்" எனனும் திருப்பதிகத்தில் நவக்கிரக தோஷங்களும், நட்சத்திர தோஷங்களும் தம்மைச் சாராவென்று முதல் இரண்டு செய்யுட்களில் இவர் விளக்கியது காண்க. தமது திருவுள்ளத்தில் சிவபெருமான் குடி புகுந்ததால், ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழம், வெள்ளி, சனி பாம்பிரண்டும் நல்லவை என்றும் அவை அடியார்க்கு மிகவும் நல்லவை என்றும் இருபத்தேழு நட்சத்திரங்களில் "ஒன்பது," "ஒன்று" "ஏழு" "பதினெட்டு" "இருபத்திநான்கு" முதலிய நட்சத்திரங்கள் பிரயாணத்திற்கு விலக்கப்பட்டனவென்றும், ஆயினும் அவை அடியார்க்கு அனபோடு நன்மைசெய்யும் என்றும் கூறினர். ஆகையால் அக்காலத்தில் ஜோதிடமானது ஜனங்கள் மனதில் ஆழ்ந்திருந்ததென்பதற்கு யாதொரு சந்தேகமுமில்லை, வான சாஸ்திர வழியே கோலங்களின் நிலையால் பூலோகத்திற்கும், மனிதர்களுக்கும் வரும் பயன்களைப் புகலி வேந்தர் கீழ் வரும் செய்யுளில் குறிப்பிடுகின்றார்.

"சனி புதன் ஞாயிறு வெள்ளி
திங்கட் பல தீயன
முனிவனது செய்தகந் தானே
வென்றவ் வினைமூடிட
இனியருள் நல்கிடென் றண்ணல்
செய்த விராமேச்சுரம்
பனிமதி சூடிகின் றூடவல்ல
பரமேட்டியே"

### 3. சம்பந்தர்கால வானநூற் சிறப்பு

நமது காலத்திலுள்ள ஜோதிட நூல் முன்னோர் சரக்கைக் கொண்டு செய்யும் வியாபாரத்தை ஒக்கும். சம்பந்தர் காலத்து ஜோதிடமோ, வான நூல் இலக்கணத்தைக் கொண்டும் கோளங்களால் வரும் அனுபவத்தைக் கொண்டும் விருத்தி யடையும் ஒரு பயிரை ஒக்கும். அக்காலத்தில் தனித்தனி மாந்தர் வசிப்பதை விட்டுக் குடும்பங்களாய் வசித்தது போலத் தனியாய் மனிதர் ஜாதகங்களைப் பிரத்தியேகமாய்க் கணிப்பதில் மனதைச் செலுத்தாமல், கோளங்களால் உலகத்திற்கு ஏற்படும் பலனை முக்கியமாய்க் கவனிப்பவர்களா யிருந்தனர். இது மூவர் தேவாரத்திலும் சிற்சில இடங்களில் குறிக்கப் பட்டது. பன்னிரண்டு இராசிகளில் உள்ளவை முறையே அஸ்வனி முதல் ரேவதி ஈறாக இருபத்தேழு நட்சத்திரங்களாதலால் ஓர் இராசிக்கு சராசரி இரண்டேகால் நட்சத்திரங்கள் ஏற்படும். இந்த நட்சத்திரங்களும் பெரும்பாலும் கூட்டங்களாவதால் அவைகளைப் பின்னங்களாக்க இயலும். ஆதலால் கார்த்திகை நட்சத்திரக் கூட்டத்தின் 1ஒரு பாகம் அஸ்வினி, பரணியுடன் சேர்ந்து மேஷ இராசியாயும், மற்றொரு பாகம் ரிஷபத்தின் கொம்பாகவும் நிற்கும். இந்த இராசிகளில் நவக்கிரகங்கள் முறையே பிரவேசிப்பதால் உலகத்திற்குப் பலன் வெவ்வேறும். திருவாதிரை ஞாயிற்றில் சோ நாட்டில் கோடை மழை தப்பாது பெய்யும். இன்றேல் மிகவு பஞ்சமாம். சூரியனும் கிருத்திகை நட்சத்திரமும் சம்பந்தமாகும்போது "கத்திரி" உஷ்ணம் உண்டாகும். இம்மாதிரியாகவே சூரியன் ஒவ்வோர் இராசியிலும் ஒவ்வொரு நட்சத்திர சம்பந்தமாகும்போது உண்டாகும் பலன்கள் வேறும். இவ்விருபத்தேழு நட்சத்திரங்களில் ஒவ்வொரு நட்சத்திரப் பிரவேசத்திலும் சூரியன் சுமார் 13⅓ நாள் காணப்படுவான். இதன்றியும் திங்கள், செவ்வாய் முதலிய கிரகங்கள் இந்த இராசிகளில் பிரவேசிக்குங் காலத்தில் அவற்றிற்குத் தக்கவாறு பலன்களை முறையே விளைவிக்குமென்பதும் தேவாரத்தி லுணரலாகும். மற்றும் தேவாரத்தினின்று அனுமானிக்கக் கூடிய சில உண்மைகளுமுள. அவையாவன: சந்திரன் 27⅓ நாட்களில் 27 நட்சத்திரங்களைக் கடந்து செல்லுகின்றானதலாலும் ஒரு தினத்திற்கு ஒரு நட்சத்திர மாவதாலும் அவன் பலன் அவ்வளவு விசேஷமாகக் காட்டப்படுவதில்லை. ஏனைய கோளங்களின்பலன்களில் இது பெரும்பாலும் ஒடுங்குமாயினும் திங்களின் ஆட்சி சில காலங்களில் விளங்குவதும் உண்டு. செவ்வாய் தனுஸ் (வில்) இராசியில் பிரவேசிக்கும் போது உலகத்தில் அரசர்களுக்குச் சண்டை நேர்வது சாதாரணமாம். எல்லாக் கோள்களிலும் சில காலம் வலிவாய் நின்று பெரும்பாலும் தீங்கு விளைவிக்கக் கூடியது சனிக்கிரகமாகும். மீனராசியில் சனி புகுமாயின் யாது விளையும் என்பது கீழ்வரும் சம்பந்தர் பாசுரத்தில் அனுமானிக்க.

"அலங்கல்மலி வானவருந் தானவரும்
அலைகடலைக் கடையப் பூதம்
கலங்கஎழு கடுவிடமுண் டிருண்ட
மணிகண்டத்தோன் கருதுங் கோயில்
விலங்கலமர் புயல் மறந்து மீன்
சனிபுக் கூன்சலித்துங் காலந்தானுங்
கலக்கலியா மனப்பெருவண் கையுடைய
மெய்யர்வாழ் கழுமலமே"

சிங்காசியின் கண்ணுகிய மகத்தில் சனி புகுவனுயின் சிங்க நோக்கே போல்,ஆவதற்குமின்றி அழிவதற்கு மின்றி யிருக்கும் கருத்தைச் சுந்தாரும் "மகத்திற் புக்கதோர் சனியெனக்! கானுய்" என்னுந் திருவொற்றியூர் பதிகச் செய்யுளில் கூறுதல் காண்க.

எனவே சம்பந்தர் காலத்தில் வான சாஸ்திரக் கல்வியானது தற்காலத்தை விட மேன்மையதாய், வளருவதாய், விருத்தியடைவதாய் ஜோதிடத்தை யொருபாகு பாடா யுடையதாய் இருந்த தென்பது திண்ணம். கோளறு திருப்பதிகத்தில் இரண்டாம் செய்யுள் பரணியைத் துருவனுகக் காட்டிக் கணக் கெடுப்பதும் சிலப்பதிகார காலத்தில் கிருத்திகை நக்ஷத்திரம் துருவனு யிருந்ததும் நாம் கவனிப்போமாயின் சம்பந்தர் கால நிர்ணயம் தற்கால ஆராய்ச்சியில் ஏற்பட்டது சரியா என்று ஐயுற நேரும். இதை அறிஞர் ஆராய்க.





## பேயர் யுத்தமும் அடிகளின் தொண்டும்

### கண்டனத்திற்குப் பதில்

சில தினங்களுக்கு முன் ஸ்ரீ. ஆண்ட்ரூஸ் லண்டன் மகாநகரில் செய்த சொற்பொழிவில் போயர் யுத்தத்தில் மகாத்மா காந்தியின் தலைமையில் இந்தியர்கள் செய்த அரிய தொண்டுகளைப் பற்றிப் புகழ்ந்து பேசினர். அதைக் கண்டித்து தளகர்த்தர் சர். தாமஸ் காலவே ஒருவாதம் எழுப்பியுள்ளார். யுத்த களத்தில் பீரங்கியினின்றும் நெருப்புப் பொழியு மிடங்களில் இந்தியர் சென்றதே கிடையா தென்றும், கொலன் சோவக்கருகில் ராபட்ஸ் பிரபுவின் ஒரேமகனை இந்தியர் யுத்தகளத்திலிருந்து தூக்கி வந்ததே கிடையா தென்றும் தளகர்த்தர் உறுதியாகக் கூறினர். இதற்குப் பதில் சரியான ஆதாரங்களுடன் ஸ்ரீ ஆண்ட்ரூஸ் "மார்னிங் போஸ்டு" பத்திரிகையில் பிரசுரித்திருக்கிறார் :

இதைக் குறித்து "அசோசியேட் பிரஸ்" நிருபர் காந்தியடிகளைச்சென்ற திங்கட்கிழமை பேட்டி கண்டு கேட்டபோது அடிகள் பின்வருமாறு பதிலுரைத்தார்.

"கொலன்ஸோவுக்கு அருகிலுள்ள சிவிலி என்னு மிடத்திற்கு லெப்டினட். ராபர்ட்ஸ் செலையுண்ட போரின் முடிவில் சாயங்காலம் ஆயிரத்து நூறு இந்தியர்களைக் கொண்ட ஜிஜிச்சா படையினர் வந்துற்றனர். கர்னல் காலவே ஸ்ரீ ராபர்ட்ஸின் உடல் உடனே கொண்டுவரப்படவேண்டுமென எனக்கு ஆக்ஞாபித்தார். நாங்கள் அப்பொழுது கூடாரத்தைக்கூட அடிக்கவில்லை. உடனே அக்காரியத்தை நிறைவேற்ற நான் ஏழுஇந்தியர்களை அனுப்பினேன். அவர்கள் கூலிகளல்ல; கல்வி அறிவுள்ள இந்தியர்களே. இதற்காக ஸ்ரீ காலவே என்னைப் பாராட்டியது மன்றித் தம்ம மறுநாள் அவர் கூடாரத்தில் வந்து காணுமாறு டாக்டர்மூலமாக அழைத்தார். இச்சமயம் சண்டை நடை பெறவில்லை என்பது உண்மை. இருதிறத்தினரும் தங்கள் தங்கள் காயம்பட்ட வீரர்களை யுத்தகளத்தினின்றும்எடுத்துச்செல்லப் போரை நிறுத்தி இருந்தனர். நாங்கள் வேண்டியும் எங்களை யுத்தம் நடை பெறும் காலத்தில் உள்ளே சென்று உழைக்க அனுமதிக்க வில்லை.

ஆனல் சுப்பியன் காப் சண்டையில் நிலை மிகவும் கேவலமாகிவிட்டது. தளகர்த்தர் புல்லர் என் கூடாரத்திற்கு வந்து நானும் என் சகாக்களும் ஸ்பியன் காப்பின் அடியிலிருந்து அறுபது காயமுற்ற வீரர்களை நெருப்பு மழைக்கு அஞ்சாமல் யுத்த களத்துக்குச் சென்று தூக்கி வந்தால் தாம் எப்பொழுதும் நன்றி யறிதலுடையவராக இருப்பாரெனச் சொல்லி மிகவும் வேண்டினர். நானும் என் தோழர்களும்இதைக்கேட்டு மிகமகிழ்வெய்தினேம். மேஜர் பாப்டி வழிகாட்ட நாங்கள் யுத்த களத்துள் சென்று ஜனரல் வுட்கேட், மேஜர் ஸ்காட்மான் கிரீட் முதலிய பலரைக் கொண்ட வீரர்களைச் சுமார் 25 மைல்கள் தூரம் எடுத்துவந்தோம். வல்கிராஸ்குன் சண்டையிலும் இம்மாதிரியே சென்று உதவி புரிந்தோம். இந்தக் குறித்து தளகர்த்தர் புல்லர் தமது அரசாங்கத்தினருக்கு அனுப்பும் அறிக்கைகளில் கண்டு மெச்சியிருக்கிறார். இதற்காகவே எனக்கும் மற்ற இருபது தலைவர்களுக்கும் யுத்தப் பதக்கங்களை வெகுமதியாக அளித்தனர்.

சென்னை மாகாண முகமதிய ரல்லாதார் மகாநாடு :— சென்னை மாகாண முகமதியரல்லாதார் மகாநாட்டைத் திருச்சியில் நடத்துவதற்குப் பூர்வாங்க மான ஏற்பாடுகள் நடந்து வருகின்றன. மகாநாடு ஜூலை மாதம் மூன்றுவது வாரத்தில் நடைபெறும். இதன் வரவேற்புக் கமிட்டிக்கூட்டம் 21-6-31ஞாயிற்றுக்கிழமை மாலை கூடும். தலைவர் முதலியோர் அக்கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்படுவர் என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

° ° °

வங்கநாட்டுச் சிறைச்சாலை இன்ஸ்பெக்டர் ஜனரல் ஸ்ரீ சிம்சனைக் கொலை செய்ததாகக் குற்றம் சாட்டப்பட்டு மரண தண்டனை விதிக்கப்பட்ட ஸ்ரீ. தினேஷ்குப்தாவும், இராம கிருஷ்ண விஸ்வாசும் மற்றும் பல அரசியற் கைதிகளும் அலிப்பூர் சிறையில் சில குறைபாடுகளுக்காக சென்ற 10 நாட்களாக உண்ணாவிரதம் அனுஷ்டித்து வருகின்றனர். இவர்களில் பலர் 6 பவுண்டு எடையில் குறைந்ததோடு உஷ்ணம் தாங்கமுடியாமல் மூர்ச்சித்துவிடுகின்றனராம். திரு. குப்தாவும், திரு. விஸ்வாசும் பிரிவி கவுன்சிலில் அப்பீல் செய்துகொண்டது தள்ளப்பட்டுவிட்டது. அவர்கள் சென்ற திங்கட்கிழமை தூக்கு மேடையில் ஏறியிருக்க வேண்டும். திரு. குப்தாவின் தாயார் அவர்களிடம் இரக்கங்காட்டும்படி கவர்னருக்குத் தந்தி கொடுத்திருக்கிறார்.

## அடிகள் போர்சாத்தில் தங்குவதன் நோக்கம்

### எல்லைப்புற மாகாணம் போக விருப்பம்

அசோசியேட் பிரஸ் நிருபர் அடிகளை அவர் என் போர்சாத்தில் தங்க விரும்புகிறார் என்றும் எல்லைப்புற மாகாணத்திற்குப் போவாரா என்றும் வினவியபொழுது அடிகள் பின் வருமாறு பதில் சொன்னர்:—

ராவில் தாளா வகுப்பினர் அடிக்கடி வேலிகளை அழித்தும் சில சமயங்களில் ஜனங்களைத் தாக்கியும் வருகின்றனர். இதனுல் பீதி அடைந்த மக்களைத் திருப்தி செய்யவே நானிங்குற்றேன். கிராம முனிசிப்தங்கள் சாதியினரானபடியாலும், அவர் ஒரு பழங் கைதியாக யிருந்தும் வேலையினின்றும் விலக்கப்படாதபடியாலும் தாளா வகுப்பினர் மிகவும் தைரியமா யிருக்கின்றனர். ஆகவே டில்லி ஒப்பந்தப்படி இரு அம்சங்களின் பேரில் அவரை விலக்க வேண்டுமென்று அரசாங்கத்தினரை வேண்டி யிருக்கிறேன். ஒன்று அவர் சிறை புகுந்தவர்; மற்றொன்று அவர் தற்காலிகமாகவே வேலையில் அமர்த்தப்பட்டவர். தவிர நான் மற்ற வகுப்பு மக்களையும் அரசாங்கத்தினர் கவனித்துக் காக்கும்படி வேண்டியு மிருக்கிறேன். இவைகளை இப்பொழுது கெய்ரா ஜில்லா கலெக்டர் கவனித்து வருகிறார். ஆகவே நான் இப்பொழுது மேலே ஒரு வித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளப்போவதில்லை. இக்காரியம் முடிந்ததும் சர்தார் படேல் ஆணைக்கிணங்கி நான் பார்தோலி போவேன்.

ஸ்ரீ கான் அப்துல் காபர்கான் நான் எல்லைப்புற மாகாணத்திற்கு வரவேண்டுமென்று என்னை மிகவும் வற்புறுத்துகிறார். எனக்கும் எல்லைப்புற ஜாதியினர் எவ்வாறு அஹிம்சா தர்மத்தைக் கையாளுகின்றனரென்று காண ஆவலா யிருக்கின்றது. ஆனல் ஒப்பந்த மிருக்கும்வரை நான் அரசாங்கத்தினர் விருப்பத்திற்குமாறாக எதுவும்செய்ய விரும்பவில்லை. ஆகவே, நான் இதைக்குறித்து அரசாங்கத்தினருக்கு எழுதிக்கொண் டிருக்கின்றேன். இதன் முடிவு தெரிந்தபின்னர் தான் ஸ்ரீ. அப்துல் காபர் கான் தம்மூர் செல்வார்.

## சமஷ்டி முறைக்கு உலை

### மன்னர்களின் எதிர்ப்பு

பாடியாலா மகாராஜா தாம் ஐக்யமுறையை எதிர்ப்பதாகவும் அதற்குப்பதிலாகத் தாம் வேறொரு திட்டத்தைத் தயாரித்திருப்பதாகவும் அதை இன்னுமொரு வாரத்தில் வெளியிடப் போவதாகவும் சொல்லுகிறார். மகாராஜா லண்டன் வட்டமேஜை மகாநாட்டிலே ஐக்ய திட்டத்தை ஒப்புக்கொண்டு அதை மிகவும் புகழ்ந்து பேசிய வள்ளல். ராம்பூர் சமஸ்தான நவாபும் ஐக்ய திட்டமுறையை எதிர்க்கின்றார். அவர் சுதேச சமஸ்தானங்களுக்கும் பிரிட்டிஷ் இந்தியாவுக்குமுள்ள வேற்றுமைகள் ஒழிந்தால்தான் ஐக்ய திட்டமுறை சாத்யமெனவும், இந்திய அரசாங்கத்தின் அரசியல் இலாகாவை எடுக்கக் கூடாதென்றும் கூறுகிறார். ஆனல் மன்னர் சபையின் அத்யக்ஷர்போபால் நவாப்மன்னர்சபைஐக்ய முறையை வேண்டாமென்று தீர்மானிக்கும் வரை அம்முறையை மன்னர்கள் ஆதரிப்பதாகக் கருதவேண்டுமெனச் சொல்லுகிறார். மன்னர் குழாமும் ஐக்ய ஆட்சிமுறை இந்தியாவில் நிறுவ மேல்நடவடிக்கைகளைக்கவனிக்கும்படி ஒரு கமிட்டியை நியமித்திருக்கின்றது.

## அடிகளும் மகாநாடும்

### லண்டனில் எளியோருடன் தங்குவார்

டில்லியில் பிரசுரமாகும் "ஹிந்துஸ்தான் டைம்ஸ்" பத்திரிகையில் பின்வரும் செய்தி காணப்படுகின்றது :—

காந்தியடிகள் வட்டமேஜை மகாநாட்டில் கலந்துகொள்ளச் சீமைக்குச்செல்லும்பொழுது மரக்கலத்தின்கடைசிவகுப்புப்பிரயாணியாகவே செல்வார். அடிகள் லண்டனிலுள்ள நண்பரொருவருக்கு எழுதியுள்ளலிகிதத்தில் தாம் லண்டன்மாநகரின் கீழ்க்கோடியிலுள்ள "கிங்ஸிலி" மண்டபத்தில் தங்கவிரும்புவதாக எழுதியுள்ளார். இது அனாதைகளுக்கும் எளியோர்களுக்கும் ஏற்பட்ட இடம். இச்செய்தி பலரைக் கலங்கிவிட்டது.

"ஹோட்டல் வேண்டாம்"

திரு. பிர்லா அவர்களால் மிகுந்த பொருட் செலவிலே ஹாம்ஸ்டட் என்னுமிடத்தில் நிறுவப்பட்டிருக்கும் ஆரியபவனத்தில் அடிகள் வந்திறங்குவாரென யாவரும் எண்ணியிருந்தனர். அடிகளோ இந்தியாவிலும் சரி அல்லது இங்கிலாந்திலும் சரி தாம் எப்பொழுதும் எளியோருடனே வசிக்க விரும்புகின்றார். அதனுல்தான் அடிகள் "கிங்ஸிலி" மண்டபத்தில் இறங்கவேண்டுகிறார். இதுவரை பிரபலமான எல்லா அரசியல் வாதிகளும் அரசியல் சம்பந்த விஷயங்களைக் குறித்து லண்டனுக்கு வருங்கால் சிறந்தஹோட்டல்களிலேயே தங்குவது வழக்கம். சென்ற வட்டமேஜை மகாநாட்டின் காலத்து இந்தியப் பிரதிநிதிகளில் பெரும்பாலோர் சிறந்த ஹோட்டல்களிலேயே தங்கினர். சிலர் பிரபுக்களிருக்கும் பிரதேசத்தில் தனி ஜாகைகள் அமைத்துக் கொண்டனர்.

"அடிகளும் ஸ்ரீ. லெனினும்"

அடிகள் மாத்திரமே தாம்லண்டனுக்கு அரசியற் சம்பந்தமான விஷயங்களை விவாதிக்க வரும்அரசியல்வாதிகளுள்முதல்முதலாகஎளியோர்க்கென ஏற்பட்ட விடுதியில்தங்குகிறார். அடிகளுக்கு முன்னரேயே பல தலைவர்கள் "லண்டன் ஈஸ்டு எண்" டில்வாழ்க்கை நடத்தினரென்பதும் உண்மை. ஆனல் அத்தலைவர்கள் அப்பொழுது அரசாங்க விருந்தினராக அங்குற்றாரல்லர். பின் அவர்கள் தாய்நாட்டினின்றும் துரத்தப்பட்டவர்களாய் இந்நாட்டில் அடைக்கலம்புகுந்துவாழ்ந்தனர். ருஷிய நாட்டின் புரட்சிக்கு முன்னரே, ஸ்ரீ. டிராட்ஸ்கியும், சோவியத் குடியரசை நிறுவியவரும் அதன் முதல் எதேச்சாதிகாரியாயுமான ஸ்ரீ. நிகோலே லெனினும் லண்டன் "ஈஸ்டு எண்டு" பாகத்தில்வாழ்ந்தனர். ஐரோப்பிய அரசியல் வாதிகளுள் யாவரையும்விட ஸ்ரீ. லெனின் அவர்கள் எளிய மக்களுடன் தமது வாழ்நாளில் பெரும் பாகத்தைக் கழித்தவரானலும் தாமாகவே தான் எளியோரின் விடுதியில் வாழ வேண்டுமென்று எண்ணியதும் விரும்பியதுமில்லை. சந்தர்ப்பங்களும், காலமும் லெனின் வாழ்வை எளியோருடன் கழிக்கச் செய்தன. அடிகளோ தாமாகவே, அரசாங்கம் அவரைத் தமது விருந்தினராக அழைக்குங்கால், எளியோருடன் வாழவிரும்புகிறார். இம்முறையைக்கைக்கொள்வது இதுவே முதன்முறை.

அறப்போரில் மிளிர்ந்த திரு. கிருஷ்ண மூர்த்தி நாயுடு என்னும் போலீசு சப்இன்ஸ்பெக்டரை வடபாரிச டிப்டி இன்ஸ் பெக்டர் ஜனரல் அவர்கள் வேலை யினின்றும் நீக்கிவிட்டார். கொஞ்ச நாட்களுக்கு முன்னர் அவர் பள்ளிப்பிள்ளைகளைத் தடியடிக்கு உட்படுத்தியதை முன்னிட்டு அதிகாரிகள் விசாரித்தளித்த தீர்ப்பே இதற்குக் காரணமாம்.

## காங்கரஸ் காரியக் கூட்டம்

### வட்டமேஜை மகாநாட்டில் கலத்தல்

சென்ற வாரம் செவ்வாய், புதன், வியாழக்கிழமைகளில் பம்பாயில் அ. இ. கா. காரியக் கூட்டம் சர்தார் படேலின் தலைமையில் கூடியது. பாபுராஜேந்திரபிரசாத் பம்பாய் நகருக்கு வந்திருந்தும் சுகக்கேடின் நிமித்தம் அவர் கூட்டத்தில் ஆஜராக இல்லை. மற்ற உறுப்பினர் அனைவரும் வந்திருந்தனர். அழைப்பின் பேரில் பண்டித மாளவியா, டாக்டர் பட்டாபி சீதாராமய்யா, ஸ்ரீ. கொண்டா வேங்கடப்பய்யா, திரு. கான் அப்துல்காபூர்கான, டாக்டர் ஆலம், திரு. சுபாஷ்போஸ் முதலியவர்கள் வந்திருந்தனர். பின்வரும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

1. இருதிறத்தினத்தினருடைய சம்மதத்தின் பேரில் வங்காளத் காங்கரஸ் தேர்தலை விசாரிக்கச் சர்வ அதிகாரங்களுடன் திரு. ஆனேயை நியமிக்கின்றது.

2. வகுப்புப் பிரச்னைகளை, அனைவருக்கும் திருப்திஅளிக்கும் வகையில் தீர்க்க இப்பொழுது செய்யப்படும் முயற்சி வெற்றிபெறுமென நம்புகின்றது. ஒரு சமயம் இம்முயற்சி தோல்வியுற்றாலும், மற்ற விஷயங்கள் சாதகமாயிருப்பின் காங்கரஸ் நிலைபற்றித் தவறான கருத்து நிகழாமலிருக்கும் பொருட்டு, அந்நிலையை விளக்க அழைக்கப்படின் காந்தியடிகள் வட்டமேசை மகாநாட்டிற்குச் செல்லவேண்டும்.

3. கதரைத் தவிர மற்றத் துணிகளையும் வியாபாரம் செய்யும் கடைகளுக்குக்காங்கரஸ் கமிட்டிகள் நற்சாட்சிப் பத்திரங்கள் அளிப்பதைச் காங்கரஸ்கமிட்டியார் விரும்பவில்லை. ஏற்கனவே இங்ஙனம் வழங்கப்பட்டிருக்கும் பத்திரங்களைத்திருப்பிப்பெற்றுக் கொள்ளும்படி தெரிவிக்கிறது.

4. அன்னியத்துணி பகிஷ்கார சம்பந்தமாய் இக்கமிட்டியார் வெளியிட்டிருந்த விதிகளுக்கு மாறாக சில காங்கரஸ் கமிட்டிகள் தற்பொழுதிருந்தவரும் துணிகளை சிலகாலம் வரை விற்றவர அனுமதி கொடுத்திருப்பதைக் கண்டு வருந்துகின்றது. அவ்வேற்பாட்டை உடனே ரத்துசெய்யும்படி அக்காங்கரஸ் கமிட்டிகளுக்கு இக்கமிட்டி அறிவிக்கிறது. காங்கரசின் திட்டத்திற்கு மாறாக நடந்துகொள்ளும் நபர்மீதோ கமிட்டி மீதோ தக்க நடவடிக்கைகளை எடுத்துக்கொள்ள இக்கமிட்டித்தலைவருக்குஅதிகார மளிக்கிறது.

5. மாகாண காங்கரஸ் கமிட்டிகள் அ. இ. கா.சமிட்டிக்குச் செலுத்தவேண்டியதொகைகளை நிர்ணயித்து, அவைகள் ஆகஸ்ட் மாதம் 15-ந் தேதிக்குள் அனுப்பப்படவேண்டுமெனத் தீர்மானிக்கிறது.

6. டில்லித்தேர்தலை விசாரிக்கப் பண்டித நேருவை நியமிக்கிறது.

7. பொதுக்கடன் விசாரணைக்கமிட்டியும், மூலாதார உரிமைக்கமிட்டியும் தங்கள் அறிக்கைகளை அனுப்ப முறையே ஜூன்மீ 21 முதல் 30-ந் தேதி வரை அவகாச மளிக்கின்றது.

## ஸால்டர் திட்டம்

இந்திய அரசாங்கத்தினருக்குப் பொருளாதாரத் துறையிலே கையாள வேண்டிய முறைகளைக் குறித்து யோசனை சொல்ல ஒரு கழகத்தைநிறுவும் முறையைக்குறித்துத் திட்டம் செய்ய சர். ஆர்தர் ஸால்டர் என்னும் ஜினிவா சர்வதேச மகாசபையின் பொருளாதார நிபுணரை மேது அரசாங்கத்தினர் வரவழைத்தனர். அவர் தமது திட்டத்தின்படி வர்த்தகர்கள், லேவாதேவிக்காரர்கள், விவசாயிகள், கூட்டுறவாளர் முதலிய பலர் கொண்டமத்தியசபையையும் மாகாண சபைகளையும் அரசாங்கத்தினருக்கு ஆலோசனை கூறநிறுவப்படவேண்டுமெனக்கூறுகின்றார். ஆனல் இப்பொழுது அரசியற்றுறையில் ஒரு பெரும் மாறுதல் ஏற்படக் கூடிய நிலையிருப்பதால் இப்பொழுது இதன்மேல் ஒருவித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ள வேண்டாமென்றும், பின்னரே கூடும் அரசாங்கத்தினர் இதைக் கவனித்தல் வேண்டுமெனவும் குறிப் பிட்டுள்ளார். இது வரை அரசாங்கம் தனது உத்தியோகஸ்தரின் மொழிகளின் படியே பொருளாதாரத் துறையிலே நடந்து வந்தது. பன்முறை பலகமிட்டிகளைப் பொருளாதாரத்தகவல்களை விசாரிக்க நியமித்து அவைகளின் சிபார்சுகளின் மேல் ஒரு நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளாமல் உளாயிருந்து விட்டது. இம் முறையும் அரசாங்கம் ஸால்டரின் திட்டத்தை அரசாங்க முறை மாறுதலை முன்னிட்டு அதன் சிபார்சுகளின்படி ஒருவித நடவடிக்கையும் எடுத்துக் கொள்ளுவதில்லை எனத் தீர்மானித் திருக்கின்றது.

# சமஸ்தானப் பிரஜைகள்

## பம்பாயில் மகாநாடு

சென்ற வாரம் பம்பாய் நகரில் ராயல் ஆப்பரா ஹவுஸில் பாபுஇராமானந்த சாட்டர்ஜியின் தலைமையில் இந்திய சமஸ்தானப் பிரஜைகள் மகாநாடு கூடிப் பல தீர்மானங்களை நிறைவேற்றியது.

முதலாவது தீர்மானம் சமஸ்தான அரசாங்கங்கள் பொறுப் பற்றவைகளாகவும், ஏதேச்சாதிபத்தியம் நடத்துபவைகளாகவுமிருப்பதைக் கண்டித்து, சர்வகக்ஷி மகாநாட்டில் தங்களுடைய பிரஜைகளின் பிரதிநிதிகளாக இருக்கவோ, அல்லது அவர்கள் சார்பாகப் பேசவோ சமஸ்தானாதிபதிகள் கொண்டாடும் பாத்தியதையை மறுத்தது. சமஷ்டி அரசியல் கமிட்டியிலும் சர்வகக்ஷி மகாநாட்டிலும் சமஸ்தானப் பிரஜைகளுக்கு அவர்களுடைய சொந்த ஹோதாவில் பிரதிநிதித்துவம் கொடுக்க வேண்டுமென்றும், சமஸ்தானாதிபதிகள் கோரும் உரிமைகளுக்கும் சமஸ்தானப் பிரஜைகள் கோரும் பாத்தியதைகளுக்கும் முரண்பாடு இருப்பதை சர்வகக்ஷி மகாநாட்டின் பிரதிநிதிகளும் முக்கியமாகக் காங்கரஸின் ஏகப்பிரதிநிதியான மகாத்மா காந்தியும் கவனித்து, அவர்கள் கீழ்க்கண்ட அடிப்படையான-முக்கியமான அம்சங்களை வற்புறுத்த வேண்டுமென்றும் கேட்டுக் கொண்டது. அந்த முக்கிய அம்சங்களாவன:—

(1) அகில இந்திய விஷயங்கள் எல்லாம் சமஷ்டி அரசாங்கத்துக்குட்பட்டவைகளாக இருக்கவேண்டும். எல்லா இடங்களுக்கும் ஒரேமாதிரியான முறைகளை அனுஷ்டிக்க வேண்டும்;

(2) சமஷ்டி இலாகாக்கள் சமஷ்டி அரசாங்கத்தின் நிர்வாகிகளுடைய ஆதீனத்திலிருந்து வரவேண்டும்;

3. விசேஷ அதிகாரம் பெடரல் அரசாங்கத்துக்கு இருக்கவேண்டும்; இப்பொழுது சமஸ்தானங்களின்மீது இந்தியா அரசாங்கத்துக்குஇருந்துவரும்சர்வாதிகாரமும் பெடரல் அரசாங்கத்திடம் மாற்றப்படவேண்டும்; இராஜப்பிரதிநிதி யிடத்திலாவது, அல்லது பொறுப்பற்றஇராஜ்ய இலாகாவிடத்திலாவது அதை விட்டுவைக்கக்கூடாது.

தவிரவும் சமஸ்தானப் பிரஜைகளுடைய அடியிற்கண்ட குறைந்தபக்ஷக் கோரிக்கைகளை அங்கீகரிக்காவிடில் சர்வகக்ஷி மகாநாட்டில் செய்யப்படும் எவ்வித முடிவையும் சமஸ்தானப் பிரஜைகள் ஏற்றுக்கொள்ளமாட்டார்களென்றும் தீர்மானம் செய்யப்பட்டது:—

1. தேசமெங்கும் ஒரேவிதமான சமஷ்டி பிரஜா உரிமை;

2. சமஸ்தானப் பிரஜைகளின் ஜீவாதார உரிமைகளை அரசியல் சட்டத்திலேயே ஏற்படுத்திவிட வேண்டும்.

3. சமஸ்தானப் பிரஜைகளுடைய ஜீவாதாரமான உரிமைகளைப் பாதுகாப்பதற்காகப் பெடரல் நீதி ஸ்தலத்தை ஏற்படுத்தவேண்டும்.

4. சமஸ்தானப் பிரஜைகளுக்குப்பெடரல் சபையில் நேர் முகமான பிரதிநிதித்துவங் கொடுக்கவேண்டும்.

5. சமஸ்தானங்களிலுள்ள நீதி ஸ்தலங்களைப் பெடரல் சுப்ரீம் கோர்ட்டுடன் இணைத்து விடவேண்டும்.

இந்தக் கோரிக்கைகளை மகாத்மா காந்தி நிறைவேற்றிக் கொடுப்பாரென்று அவரிடத்தில் பூரண நம்பிக்கை வைப்பதாக மகாநாடு தெரிவித்துக் கொண்டது.

ஐரோப்பா யாத்திரையில் சமஸ்தானாதிபதிகள் காலத்தையும் பணத்தையும் செலவழிப்பதைக் கண்டித்து ஒரு தீர்மானம் செய்யப்பட்டது.

சமஸ்தானப் பிரஜைகள் தெரிவித்துக் கொள்ளும் புகார்களைக் காரியக்கமிட்டி விசாரித்து, குறைகளை நிவர்த்திக்க வழி தேடவேண்டுமென்ற தீர்மானத்தை டாக்டர் ஆலம் பிரேரணை செய்தார். தீர்மானம் நிறைவேறியது.

(1) அவுண்டு சமஸ்தானாதிபதியும் பலதான் சமஸ்தானாதிபதியும் பொறுப்பாட்சியே தங்களது நிர்வாகத்தின் இலட்சிய மென்று அறிவித்ததையும் அந்த லக்ஷியத்தைத் துரிதமாக அடைய அவர்கள் செய்யும் முயற்சியையும் இம்மகாநாடு பாராட்டுகின்றது. (2) ஜாம் நகர், கொண்டால் கத்தியவார் சமஸ்தானங்களின் ஏற்றுமதி இறக்குமதி வரி விதிக்கும் முறையானது, அருகிலுள்ள சமஸ்தானங்களில் உற்பத்தி செய்யப்படும் சரக்குகளுக்கு அனுவசியமாக அளவு கடந்த நிர்ப்பந்தத்தை உண்டாக்கு வதனாலும், அது விவசாயிகளுக்கும் உபயோகிப் போருக்கும் பெரும் கஷ்டத்தை உண்டாக்கி வைப்பதனாலும் இம்மகாநாடு அதனைக் கண்டிக்கிறது. இவ் விஷயமாக இந்தியா அரசாங்கத்தாருக் குள்ள பொறுப்பை இந்த அரசாங்கம் அவர்களது கவனத்திற்குக் கொண்டு வருகிறது. (3) மகாநாடு தனது அமைப்பு விவரங்களைப் பூரணமாகத் தயாரிக்க 9 பேர் அடங்கிய ஒரு கமிட்டியை நியமிக்கிறது. இக்கமிட்டிக்கு மற்றவர்களையும் அங்கத்தவர்களாகச்சேர்த்துக்கொள்ள அதிகார மளிக்கப் பட்டிருக்கிறது. இது தயாரிக்கும் அமைப்பு அடுத்த கூட்டத்தில் பரிசீலிக்கப்பட்டு ஊர்ஜிதஞ் செய்யப்படும் வரை நிர்வாகச் சமூட்டியின் அங்கீகாரம் பெற்றுத் தற்காலீகமாக அமுலில் இருக்க வேண்டுமென மகாநாடு தீர்மானிக்கிறது. ஸ்ரீமான்கள் எஸ். ஜீ. வாஸ், கே. டி. பாஷ்யம், ஜீ. ஆர். அபயங்கர். ஏ. வி. தாக்கர், பல்வந்தரி மேத்தா, வி. ஆர். நாயர், ஆர். என். சௌத்ரி, கே. டி. ஷா, பி. எல். சாட்கார் ஆகியவர்கள் கமிட்டி அங்கத்தவர் களாவார்கள்.

(4) பூரணப் பொறுப்பும் ஜனநாயகமும் வாய்ந்த அரசாங்கத்தை அமைதியும் நியாயமும் வாய்ந்த சகல வழிகளாலும் அடைவதே இம்மகாநாட்டின் கோட்பாடாகுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

(5) பெரியதாயும் தனியாயுமுள்ள சமஸ்தானங்கள் செலவைத் தாங்கக்கூடியதாக இருந்தால் அவற்றில் எல்லாம் பொறுப்பாட்சியை அமுலுக்குக் கொண்டுவரவேண்டுவது அவசியமென்றும் சிறியதாயுமிருக்கிற சமஸ்தானங்கள் பொறுப்பாட்சிக்காகக் கோஷ்டி கோஷ்டியாகப்பிரிக்கப்படவேண்டும்என்றும் இம்மகாநாடு தீர்மானிக்கிறது. உதாரணமாகக் கத்தியவார் சமஸ்தானங்கள், தென் மகாராஷ்டிர சமஸ்தானங்கள், பஞ்சாப் சமஸ்தானங்கள்என்று இவை பிரிக்கப்படவேண்டும்.

(6) ஸ்தல சுயஆட்சி வரிவிதித்தல், பொது நிர்வாகத்தைக் கட்டுப்பாடு செய்தல், இவற்றிற்காகத் தேர்தலை ஆதாரமாகக் கொண்ட பிரதிநிதித்துவ ஸ்தாபனங்களை நியமிக்கவேண்டும்.

(7) சமஸ்தானங்களின் வரவுசெலவு திட்டம் தெரிந்தெடுக்கப்பட்ட அங்கத்தவர்களைப் பெரும்பான்மையோராகக் கொண்ட சட்டசபை முன்பு ஆஜர்செய்து அதன் அங்கீகாரத்தைப் பெறவேண்டும். சமஸ்தானாதிபதிக்கும் அவரது குடும்பத்தாருக்கும் செலவுக்காகக் கொடுக்கப்படும் பணம் சட்டசபையினால் நிர்ணயிக்கப்படவேண்டும். எந்த வருஷத்திலாவது அனுமதிக்கப்பட்ட தொகைக்குமேல் பணம் வேண்டியிருந்தால் அதற்குச் சட்டசபையின் அங்கீகாரத்தைப் பெறவேண்டும்.

(8) சமஸ்தானங்களில் சுயேச்சைவாய்ந்தவர்களைக் கொண்டு கணக்குகளைப் பரிசீலிக்க வேண்டும்.

(9) இந்தியா அரசாங்கத்தார் பாட்டியாலா விசாரணையை நடத்திய முறையைக் கண்டித்துக் காரியக்கமிட்டி செய்த தீர்மானத்தை இம்மகாநாடு ஆதரிக்கிறது. பிட்ஸ் பாடிரிக் நடத்திய பாட்டியாலா விசாரணை யாதாஸ்தை வெளியிட வேண்டுமென்று இம்மகாநாடு கோருகிறது. காரியக் கமிட்டி நியமித்த பாட்டியாலா விசாரணைக் கமிட்டியின் வேலையை இம்மகாநாடு பாராட்டுகின்றது.

உதயபூர் சமஸ்தான விவசாயிகள் குறைகளை விசாரிக்க ஸ்ரீமான்கள் ஏ. வி. தாக்கர், பீ. ஜீ. மேத்தா இவர்களடங்கியதொரு கமிட்டியை இம்மகாநாடு நியமிக்கிறது.

இம்மகாநாடு எல்லா அடக்குமுறை உத்தரவுகளையும் ரத்துசெய்யும்படியும்இராஜீயக் கைதிகளை எல்லாம் விடும்படியும் சமஸ்தானாதிபதிகளை வற்புறுத்துகிறது. கட்சு சமஸ்தானத்தின் நாணயச் செலாவணி முறையும் கண்டிக்கப்பட்டது. ஸ்ரீமான் இராமானந்த சாட்டர்ஜிக்கு வந்தனோபசாரங் கூறியபின் மகாநாடு கலைந்தது.

ஸ்ரீமான் ஜம்னுதாஸ் மேத்தா இந்தியா அரசாங்கத்தின் நாணயச் செலாவணி முறையைக் கண்டிப்பதாகக் கொண்டுவந்த தீர்மானத்தில், அதனால் ஜனங்களது வாங்கும் சக்தி குறைந்து கடன் அதிகரித்து விட்டதென்றும் பண மார்க்கெட்டில் செய்கை முறையில் பணமுடை உண்டாகி யிருக்கிறதென்றும் இந்தியாவின் நாணய மதிப்பு குறைந்து விவசாயம், கைத்தொழில் வியாபாரம் முதலியன குன்றி விட்டதென்றும் கான்விரிசர்விலுள்ள தங்கக் கட்டி விரயம் செய்யப்படுகிறதென்றும் குறிப்பிடப்பட்டிருந்தன. 18 பென்ஸ் நாணயமாற்று விகிதம் நீடித்துக் கையாளப்பட்டால் தேசத்தின் பொருளாதார அமைப்புக்கே நாசமுண்டாகுமென்றும் ஸ்ரீமான் ஜம்னுதாஸ் மேத்தா கூறினர். சமஸ்தான அரசாங்கம் ஊழியர்களுக்குத் திட்டமான விதிகளை ஏற்படுத்தி அதன்படியே ஆட்களைச் சேர்க்கவேண்டுமென்றும் கொண்டுவந்த தீர்மானம் நிறைவேறியது.

விவசாயிகளல்லாதவர்களுக்குநிலம் சொந்தமாக இருக்கக்கூடாதென்றும் 8மணி நேரத்துக்குமேல் தொழிலாளரிடமிருந்து வேலைவாங்கக் கூடாதென்றும் நிலவாரத்தை 100க்கு 50 விதம் குறைக்க வேண்டுமென்றும் தொழிலாளருக்கு மாதம் 50 ரூபாய்க்குக் குறையாமல் கூலி கொடுக்கவேண்டுமென்றும் ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டது. முடிவில் அது தோற்றுப்போயிற்று.

[சு. மி.]





சாலி - 1854, கலி - 5033, ஆங்கிலம் - 1931, பிரசோற்பத்தி வருஷம் ஆனி மாதப் பஞ்சாங்கம்

| ஹஜுக்கு | ஆங்கிலம் | தமிழ் | வாரம் | திதி | நா வி | நக்ஷத்திரம் | நா வி | யோகம் | நா வி | கரணம் | நா வி | தியாஜ்ஜியம் நா | அமிர்தாதி யோகம் | நா வி | யோகினி | வாரசூலை | விசேஷங்கள் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 18 | 4 | வியா | [illegible] | 2 6 | புன | 29 53 | ஆ | 42 57 | கௌ | 2 6 | 0 52 | அ | 60 0 | ... | வ—அ | தெற் |
| 2 | 19 ஜூலை | 5 ஆனிமீ | வெள் | [illegible] | 56 8 / 53 32 | பூச | 27 30 | வியா | 36 35 | வணி | 25 20 | 25 4 | ம | 60 0 | ... | தி—தெ | மேற் |
| 3 சபர்மீ | 20 | 6 | சனி | [illegible] | 48 53 | ஆயி | 24 21 | அரி | 29 52 | பவ | 21 7 | 22 37 | ம | 24 21 | சி அ | தெ—மே | மேற் |
| 4 | 21 | 7 | ஞாயி | [illegible] | 42 21 | மக | 20 39 | வஜ் | 22 41 | கௌ | 15 37 | 0 0 | ம | 20 39 | சி | மே—வா | மேற் |
| 5 | 22 | 8 | திங் | [illegible] | 36 15 | பூர | 16 37 | சித் | 15 11 | கர | 9 18 | 2 16 | சி | 60 0 | ... | வா—ஈ | கிழ |
| 6 | 23 | 9 | செவ் | [illegible] | 30 9 | உத் | 12 31 | வியதி | 7 39 | பத் | 3 12 | 1 24 | அ | 12 31 | சி | ஈ—ஆ | வட |
| 7 | 24 | 10 | புதன் | [illegible] | 25 59 | அஸ் | 8 40 | பரி | 52 45 | கௌ | 25 59 | 27 50 | ம | 8 40 | சி | ஆ—நி | வட |

விசேஷங்கள்: கன்னி காமசகணம், மேடக்கும். சதுர்த்தி விரதம். கரிநாள், சுபம் நீக்க. சஷ்டி விரதம். கரிநாள், சுபம் நீக்க. கடேசர் உத்திர தரிசனம். காலை 9 க்குள் ஆயுத வேலை.

| ரா | | சு | பு-சூ |
|---|---|---|---|
| | | | குரு |
| | | | அங் |
| சனி | | | கேது |

கிரக பாத சாரங்கள்

சூரியன்.— 4உ 22-36க்கு மிருகசீர 4-ல்.
7உ 52-46க்கு திருவாதிரை 1.
அங்.— 9உ 13-34க்கு பூரம் 1-ல்.
புதன்.— 4உ 37-50க்கு மிருகசீர 4-ல்.
6உ 22-13க்கு திருவாதிரை 1.
8உ 7-23க்கு „ 2-ல்.
9உ 53-48க்கு „ 3-ல்.
குரு.— 10உ 5-18க்கு பூசம் 1-ல்.
சுக்.— 6உ 14-24க்கு ரோகணி 2-ல்.
9உ 0-10க்கு „ 3-ல்.
சனி.— வக்கிரம் பூராடம் 3-ல்.
ராகு.— 8உ 47- 6க்கு உத்திரட்டாதி4.
கேது.— „ அஸ்தம் 2-ல்.

பாலகணிதர்,
அ. பே. முத்து ஜோதிடர்,
321, ஐரோட், திருவல்லிக்கேணி, சென்னை.



# அந்நிய முதலுக்கு இடங் கொடாதீர்கள்

## உண்மை உரிமை வேண்டும்

பாரிஸ்டர் ஸ்ரீ மதுராதாஸ் திரிகம்ஜீ பின்வருமாறு தெரிவிக்கிறார்:—

இந்தியாவின் அரசியல் திட்டம் இந்நாட்டிலும், சீமையிலும் விவாதிக்கப்படும் காலத்தில் நாம்முக்கியமாக அந்நிய முதலையும், வியாபாரத்தையும், கைத்தொழில்களையும் கூர்ந்து கவனிக்கவேண்டும். பொருளாதாரத் துறையிலே அந்நியருக்கும் நாட்டினருக்கும் சமத்துவமளிக்கும் கொள்கை எவ்வளவு பாழானது என்பதை ஈண்டுக் காட்டவேண்டுவது அவசியமில்லை. அந்நியர் முதலையும் அந்நியர் கைத்தொழில்களையும் ஆதரித்ததால் மெக்சிகோ நாடானது பாழடைந்தது. சுதந்திர ஐயர்லாந்து அரசியல் திட்டத்தின் முகவுரையிலே இவ்வண்ணம் காணப்படுகின்றது.

### மெக்சிகோவின் தவிப்பு

நாட்டின் வளங்களை விருத்திசெய்து கைத்தொழில்களை நிலைநிறுத்த, மெக்சிகோ நாட்டின் முதன்மந்திரியாகச் சுமார் 25 ஆண்டுகளிருந்த தலைவர் பிரபிரியோ டயாஸ் அந்நிய நாட்டுக்கம்பெனிகளின் முதலையே நம்பியிருந்தார். அதற்காக அவர்களுக்கு அநேக சலுகைகள் அளித்தார்கள். நாடானது செழிப்புற்றதுபோல் விளங்கினும், நாட்டினுள்ளே வறுமையும் துன்பமும் அதிகரித்தன. ஆகவே தொழிலாளர்கள் புரட்சி செய்தார்கள். திரு. டயாஸ் தமது பதவியை விடுத்தார். எங்கணும் கொலைகளும், கலகங்களும் பரவின. பின்னர் உள்நாட்டுக் கலகம் பலமாக 1913-ம் ஆண்டிலே எழும்பிற்று. முடிவாக 1917-ம் ஆண்டிலே அந்நியர் நாட்டின் செல்வத்தைக் கொள்ளையிடாதவாறு அரசியல் திட்டமானது திருத்தப்பட்டு உள் நாட்டுக் கலகம் ஒழிந்தது. அத்திட்டத்தில் பின்வரும் சட்டம் காணப் படுகின்றது. நாட்டின் நீர்ப்பாசனங்களினுடையவும் நிலங்களினுடையவும் உரிமையைக் கீழ்க்கண்டவாறு அனுபவிக்கலாம். பிறப்பிலே மெக்சிகராயிருப்பவரோ, அன்றி மெக்சிகோ நாட்டிலேயே சாசுவதமாய்க் குடியேறி யிருப்பவரோ தான், நிலங்களையும், நீர்ப்பாசனங்களையும் வாங்கி ஆளலாம். அவர்கள்தான் சுரங்கங்களையும், எண்ணெய் ஊற்றுக்களையும் விருத்தி செய்யலாம். ஆனால் அந்நியர்கள் மெக்சிகோ நாட்டின் அந்நிய நாட்டு இலாகா முன்னர், தாங்கள் அந்நாட்டினரைப்போல் நடத்தப்படுவதற்கு சம்மதப் படுவதாகவும், பின்னர் அரசாங்கத்தினர் தங்களுடன் செய்துகொள்ளும் ஒப்பந்தத்திற்கு மாறுபட்டாலும், ஆக்கிரமிக்கப்பட்ட சொத்துக்களை எடுத்துக் கொண்டாலும் அதற்கு அவர்கள் தங்கள் அரசாங்கத்தினுடைய உதவியை நாடுவதில்லை என்றும் உறுதிமொழி யளித்தால் மாத்திரமே மெக்சிகோ நாட்டு அரசாங்கம் அவர்களை அநுமதிக்கலாம்.

### அகப்பட்டுக் கொள்ளவேண்டாம்

மேலே சொன்ன சட்டத்தை அப்படியே முழுவதும் வேண்டுமென்றோ, அது நம் நாட்டிற்கு நன்மை பயக்குமென்றோ நான் சொல்ல வரவில்லை. ஆனால் அது நமக்கொரு சிறந்த படிப்பினையை அளிக்கின்றது. அது வெறும் ஏட்டுப் படிப்பால் நிறுவப்பட்ட சட்டமன்று. அனுபவத்தில் கண்டு கையாளப்படுவது. மெக்சிகோவின் சரித்திரத்தினால் விஞ்ஞானக் கலையிலும், கைத் தொழில்களிலும் மேலோங்காத நாடுகள் அவசரப்பட்டுக்கொண்டு அந்நிய முதலுக் கிடங்கொடுத்து முடிவில் வறுமையடைந்ததை அறிகிறோம். ஆகவே பொருளாதாரத் துறையில் பெருந்தன்மையும் தன் நாட்டையே நம்புவதும், அந்நிய நாட்டினருக்கு அதிகச் சலுகைகளைக் கொடாமல் நாட்டின் வளமையைக் காப்பாற்ற வேண்டுவதும் அவசியமாகின்றன. நமது நிலைமையும் நம்பிவிருத்தியை முன்னிட்டு அந்நியருக்கும் நாட்டினருக்கும் வித்தியாசமான முறைகளை நாம் கையாள வேண்டுவதை அவசியமாக்குகின்றது.

பிஜித் தீவின் சரித்திரத்தை உன்னுங்கள். அமெரிக்கர் பீஜி அரசன்மீது தண்ட வரி விதித்தனர். அவன் ஐரோப்பியரின் உதவியை நாடினன். ஐரோப்பியர் அந்நாட்டின் வளமையை அறிந்து பின்னர் தாங்கள் பயனடையலாமென்று உதவி செய்தனர். அந்நியரின் உதவியை நாடியதால் அவன் தன் சுதந்திரத்தையு மிழந்தான். தான் உதவியென எதை எண்ணினனோ அது அவனை அடிமைப்படுத்தி விட்டது. அந்நியர் மெள்ள மெள்ள அந்நாட்டினுள் புகுந்தனர். அந்நாட்டைத் தங்கள் சாம்ராஜ்யத்தில் சேர்த்தனர். இப்பொழுது பீஜியர் தங்கள் நாட்டிலேயே அந்நியருக்கு அடிமைகள் போல வாழ்கின்றனர்.

அரசியல் விஷயங்களும் பொருளாதார விஷயங்களும் ஒன்றையொன்று தழுவியிருக்கின்றன. பொருளாதாரத் துறையில் சுதந்திரமில்லையேல் அத்தன்மையான அரசியல் திட்டத்தில் உண்மையாக சுயேச்சையென்பது இல்லை. இதைஅன்பர்கள் அரசியல் திட்டங்களை வகுக்கும் காலத்துக்கூர்ந்து கவனிப்பார்களென நம்புகிறேன்.

"பம்பாய் கிரானிகல்"

# ஆலய நுழைவுத் தடை

(ஆரியூர் - வ - பதுமநாப பிள்ளை பாடியன)

எண்ணிறந்த ஆண்டுகளாய் எண்ணரிய அடியவர்தாம் இறைஞ்சாநின்ற
புண்ணியநற் பதிகளிலே, புகலரிய அழகுடனே புகழ்பெற் றோங்கி
மண்ணிடையாண் டவன்நினைவை மனத்தெழுப்பி அருட்பணிகள் மகிழ்ந்துசெய்யப்
பண்ணியநற் கோயில்களின் பழம்பெருமை பழங்கதையாய்ப் பறந்ததையோ! ௧

ஒன்றேநற் குலம்பலர்க்கும் ஒருவனே தேவனெனும் உண்மைகண்ட
தென்றேயந்தனி விந்நாள் திருக்கோயில் நிலைநினைக்கச் சிந்தைவேகும்:
என்றேமெய் யன்பரெலாம் இன்பெய்த அவைதிருந்தும் இனிய நன்னாள்,
அன்றேநந் தமிழன்னை அனைவர்க்கும் ஆசிதரும் அரிய நன்னாள்! ௨

மலைகளிலே வனங்களிலே வளஞ்செய்நதிக் கரைகளிலே மகிழ்வை யூட்டும்
அலைகடலின் கரைகளிலே ஆன்றோர்கள் இயற்கையழ கமைந்தி லங்கும்
நிலையினவாய் அமைவித்த நேரியவா லயங்களிலே நிகழ்த்தும் அன்பு
நிலைகுலைய அறநெறிகள் நெகிழவொலி விழுந்தனவாய் நேர்ந்த வின்றே! ௩

உள்ளமே திருக்கோயில்; உண்மைஉரை வாய்வாயில்; உயர்இலிங்கம்
உள்ளுறைநற் சீவன்புலன் ஒளிவிளக்கா மெனமூலர் உணர்த்திச் சென்றார்:
தெள்ளியசெந் தமிழகத்தீர்! சீரியஅவ் வழிபாட்டைச் சிந்தி யாதே
கள்ளமுறு மனத்தினராய்க் கடவுளைவத் தில்பயனைக் காணு வீரோ? ௪

அன்புமணம் கமழ்ந்துயிரை ஆனந்தக் கடலினிலே ஆட்டுங் கோயில்
வன்புலன்க ளெனும்பகைவர் வலியொடுக்கி ஒன்றுபட வாட்டுங் கோயில்
பின்பெழுந்த கட்சிகளில் பெருவழக்கு களிற்பழய பெருமை நீங்கி
இன்பநிலை இழந்ததுவாய் இரங்குநிலை தனிவின்று இயைந்ததம்மா! ௫

முக்கடலும் கலக்குமிடம்; முதுபாத கண்டத்தின் முனையாமென்ன
மிக்கபுகழ் பெற்றஇடம்; வியன்தமிழ்நற் கன்னிதவம் விழைந்து செய்யப்
புக்கஇடம் குமரிமுனை: புகழ்கொள்சவ ஹரிலால்உட் புகவும், அன்னார்
தக்கவரன் றெனஅங்குத் தடுத்துநிறுத் தப்பட்ட தகைமை என்னே! ௬

ஆரியநா டுய்ந்திடவே அகங் கலங்கா தின்னல்பல அடைந்தவீரர்,
கூரியநல் லறிவுடைய குணமணியாம் சவஹரிலால், கோயில் காணக்
கோரியும்; "அவ்வேதியர்முன் குரைகடலைக் கடந்தவர்; அக்குற்றந் தன்னால்
சீரியராயினுந் தீட்டுச்சேர்ந்தவரே"—எனத் தடுத்த சிறுமை என்னே! ௭

வீரர்சவ ஹரிலால்மெய் வேதியராம்; அவரையுமே விலக்கி னோர்இப்
பாரதநாட் டினிலொடுக்கப் பட்டோர்க்கும் இரங்குவரோ; பாவம்! பாவம்!!
ஈரமிலா நெஞ்சினரே ஈனரென மற்றவரை இழிவு செய்வர்;
சீரியநா ளைப்போவார் திருப்பாணர் சென்றவிதம் தேறு வாரோ? ௮

சாதிகடந் தொளிர்கின்ற சன்மார்க்கத் தனித்தலைவன் சாருங் கோயில்
சாதியெனும் பேயாடத் தண்ணன்புநெறி மறையத் தாழ்ந்த தின்று;
நீதியிதோ தமிழ்நாட்டீர்? நின்மலனார் திருக்கோயில் நிலையிவ்வாறு
போதுவதும் பார்த்திருத்தல் பொருந்துவதோ நுந்தமக்குப் புகன்மினீரே! ௯

உடலெடுத்த எவ்வுயிர்க்கும் உயர்கோயில் நுழைஉரிமை உள்ளதேயாம்:
கடலுடுத்த இந்நாட்டில் கயமை எனும் பழிதீரக் கழறும் அன்பு
திடங்கொள்சத்தி யாக்கிரகச் செந்நெறியில் கலந்துழைக்கச் சேரவாரீர்!
கடவுளருள் பெறலாகும்; காந்திமனம் மகிழ்வாகும்; கடிதில் சேரீர்!! ௧0

## தேகவியோகம்

பிரஜோற்பத்தி ஞூ வைகாசிமீ 24-ந் (6-6-31) சனிக்கிழமை மாலை 5½-மணியளவில் திருவாளர் முருகேசு செல்லப்பா அவர்கள் நயினாதீவிலுள்ள தமது அலங்கார மாளிகையில் இவ்வுலக வாழ்வை நீத்துப் பரலோக வாழ்வைப் பெற்றார். இவர் அவ்வூரில் பல்வகைச் சிறப்போடும் கூடிய பிரபல வேளாளராயிருந்த திரு. இராமலிங்கம் முருகேசு என்பவரின் சிரேஷ்ட தவப்புதல்வராவார். இவர் இளமையிற்றானே கல்விகேள்வி முதலியவற்றில் வல்லுநராயிருந்தது காரணமாக யாழ்ப்பாணம் செ. கெ. சங்கு வியாபார சமுதாயத்தின் தலைவராயிருந்து இற்றைக்கு ஏறக்குறைய நாற்பதாண்டு திறமையோடும் கடனாற்றி வந்தார். இதனால் ஆங்காங்குப் பிரமுகர் பலர்க்கும் அத்தியந்த நண்பரானார். இலங்கை அரசினர் சங்கு வியாபார சம்பந்தமான நுட்பங்களை இவரிடத்தே காலாகாலங்களில் அறிந்து வந்தனரெனில் இவரினும்இவ்வியாபார நுட்பமுணர்ந்தோர் இலங்கையிற் பிறரு முளர் கொல்? யாழ்ப்பாணத்தபாற்கந்தோரில் உத்தியோகம் வகிக்கும்திரு. சி. விசாகப் பெருமானே இவரின் சிரேஷ்ட புதல்வராவார்.பிரபல செல்வரான இவர் தமது நாட்டில் ஆங்காங்கு ஐக்கிய சங்கங்களை நிறுவித் தலைமை வகித்தும், நவீனப் பழைய மாணவ சங்கத்தின் போஷகராயிருந்து, அதற்குப் பலவகையில் உதவியும் ஓர் உயர்தர சைவப்பாடசாலை அமைத்தற்கு முயன்றும் நயினைக் கிராமச் சங்கத்திலோர் அங்கத்தவராயிருந்தும், இன்னும் சற்கருமங்க ளெவையோ அவற்றிற்கெல்லாம் தலைமை வகித்தும் தம் தாய்நாட்டிற்கு நன்மை புரிந்தும் வந்தார்; உலகியல் வல்ல இச்செல்வனை இழந்து துன்புறும் இவரின் மனைவி மக்கள் சுற்றத்தாரோடும் கலனிழந்த இவர் நாட்டாரோடும் நாமும் அநுதாபப்படுகின்றோம். எல்லாம் வல்ல இறைவி நாகராஜேஸ்வரியின் திருவடிக்கீழ் இவர்ஆன்மா சாந்திபெறுக என்று ஸ்ரீமான். எஸ். என். கந்தய்யாபிள்ளை எழுதுகிறார்.

# பர்மாவில் பாரி திருநாள்

## தலைமைப் பேருரை

பாரதநாட்டுப் பெருவள்ளலும் வீரஞ் செறிந்த தமிழ் நாட்டு வீரனும் பறம்பு நாட்டு அரசனுமாகிய பாரிவள்ளல் திருநாளானது பர்மாவில் பிரபல பர்மிய இராஜாக்கள் வாழ்ந்ததும் ஒருகால் பர்மாவின் இராஜதானியாக விளங்கியதுமாகிய "டாங்கோ" என்னும் "கேதுமதிநகர்" (பண்டைய பெயரையுடைய பர்மிய அரசர்களால் பாலிபாஷையில் இடப்பெற்ற ஹிந்துப்பெயர்)க்குச் சமீபமாகவுள்ள அவுட்டுவின் கிராமத்திலுள்ள "மகாத்மா காந்தி ஒஞ்சோலை" யில் பிரசோற்பத்திவருடம் வைகாசிமீ 18உ (31-5-31) ஞாயிற்றுக்கிழமை பகல் மூன்று மணிக்குப் பாரிபரம்பரையில் வந்தவரும் சென்னை "லோகோபகாரி" பத்திரிகையின் நேயரும் "மகாத்மா காந்திதாசரும்" பல நூல்களின் ஆசிரியரும் "பாலபாரி" என்றழைக்கப்படுபவருமாகிய இளைஞர் பறம்பு நகர் கண்ணன் அவர்கள் தலைமையில் மிக்க சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. இவ்விழாவுக்கு முத்துராமலிங்கம்பிள்ளை (சிவகங்கை) இராமசாமி சேர்வை பெரியசாமி சேர்வை (புதுக்கோட்டை பழய அரசரின் மந்திரி வம்சத்தினர்) தஞ்சை பி. ஏ. கண்ணன் (ஜெயா வாபிசரு. சா. அரிசி யந்திராலய மானேஜர்) திருச்சி. சாரங்கபாணி நாயுடு (டாங்கோ மு. சா. மரயந்திராலய மானேஜர்) காரைக்குடி வீர சுய.வீரய்யசெட்டியார்முதலியோர்களும் வர்த்தகர்களும் உத்யோகஸ்தர்களும் பர்மிய சகோதர சகோதரிகளும் ஏனையோர்களுமாக ஏராளமாய் வந்து குழுமியிருந்தார்கள். சபா மண்டபம் முழுமையும் மலர்களாலும் செடிகளாலும் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டிருந்தது. சபாமண்டபம் முழுமையும் ஜனங்கள் நிறைந்து வெளியிலும் நின்று கொண்டிருந்ததானது பாரிவள்ளல் மீது அவர்களுக்குள்ள பக்தியையும் ஒற்றுமையையும் நன்கு புலனாக்கியது. இக்கூட்டத்திற்குப் பறம்பு நகர்க்கண்ணன் அவர்கள் தலைமை வகிக்க வேண்டுமென முத்துராமலிங்கம் பிள்ளையவர்கள் பிரரேபிக்க,பி.ஏ. கண்ணன், இராமசாமி சேர்வை யவர்கள் இருவரும் ஆமோதிக்க, முத்துராமலிங்கம் பிள்ளையவர்களால் தலைவரவர்கட்குப் பூமாலை சூட்டப்பட்டது. அதன் பின்னர் தலைவரவர்கள் தமக்கென இடப்பட்டிருந்த ஆசனத்தையடைந்து தமிழ்த்தெய்வப் பிரார்த்தனை செய்து சபையோர் மகிழும் வண்ணம் பாரியின் பிறப்பையும் புகழையும் சுமார் இரண்டு மணி நேரம் வரை விரிவுரையாகக் கூறினர்கள். பின்னர் வந்திருந்தோரனைவர்க்கும் மிட்டாய்பால் வழங்கப்பட்டுப் பாரித் திருநாள் சிறப்பாக நடைபெற்றது என்று ஒரு நிருபர் தெரிவிக்கிறார்.

## காரை நகரச் சைவ மகாசபை

1915-ம் ஆண்டு ஸ்தாபிக்கப் பட்ட இச்சபையானது சென்ற பதினேழு வருடங்களாக எம் காரை நகரத்துச் சைவசமய அபிவிருத்தியின் பொருட்டும் தேசிய விஷயத்தின் பொருட்டும் பெருந் தொண்டாற்றி வந்ததென்பது யாவரு மறிந்த உண்மையாகும். ஆரம்பந் தொடக்கமாக மாணவர்கட்குச் சமய வகுப்புகள் மூலமாகச் சமய அறிவு ஊட்டுவதிலும் பொது ஜனங்களுக்குப் பிரசங்கங்கள் மூலமாக அறிவை வளர்ப்பதிலும் பெரிதும் நன் முயற்சிகள் செய்து வந்தது. இச்சபை தனது பத்தாம் (1925) ஆண்டு தொடக்கமாக மலாய் நாட்டு அங்கத்தவர்களின் பேருதவியாலும் உள்நாட்டுச் சுருட்டுத் தொழிலாளரின் உதவியாலும் எம்மூர் இளைஞர் கட்குச் சைவத் திருநெறித் தமிழ் மறைகளாகிய தேவாரம் முதலிய வற்றை முறைப்படி ஓதப் பயிற்றுவித்து வந்தது. பன்னிரண்டாம் (1927) ஆண்டு தொடக்கமாக விசேஷமாகக் கொழும்புமா நகரிலும் இலங்கையின் மற்றப்பகுதிகளிலு முள்ள அங்கத்தவர்களின் பேருதவியால் எம்சைவ சமய அடியார்களின் பெருமையைப் புலப் படுத்தும் நோக்கமாகக் குருபூசைகளும் பிரசங்கங்களும் அவ்வவ் அடியார்களின் குருபூசைத் தினங்களில் நடத்தப்பட்டு வந்தன.இன்னும் பதினைந்தாம் (1930) ஆண்டுத்தொடக்கமாக எம்மூர்இளைஞர்கட்கு முயற்சி கொடுக்கும் நோக்கமாக மகாத்மா காந்தியடிகளின் தேச உத்தாரணத் தொழிலாகிய நூல் நூற்றலும் நெசவு செய்தலும் மலாய் நாட்டுக் காரை ஐக்கிய சங்கத்தாரின் பொருளுதவியால் வியாவிற் சைவபரிபாலன வித்தியா சாலையில் நடாத்தி வருகின்றது.

முன்உதவிசெய்ததர்பலர்கள் தொடர்ச்சியாக உதவி செய்வார்களாயின் சபையின் அபிவிருத்திமேன்மேலும் விருத்தியுறுமென்பது திண்ணம் என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.

என்கடன் பணிசெய்து கிடப்பதே
எவ்வுயிர்க்கும் அன்பாயிரு
நவசக்தி

நாமார்க்குங் குடியல்லோம் நமனையஞ் சோம் நரகத்தி லிடர்ப்படோம் நடலையில் லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணி வோமல்லோம் இன்பமே யெந்நாளுந் துன்ப மில்லை, தாமார்க்குங் குடியல்லாத் தன்மை யான சங்கரனற் சங்கவெண் குழையோர் காதிற், கோமாற்கே நாமென்றும் மீளாவா ளாய்க் கொய்ம்மலர்ச்சே வடியிணையே குறுகி னோமே.—(அப்பர்.)

சென்னை 1931ஸு ஜூன்மீ 17வ.

## சூழ்ச்சி

சைமன் குழுவினைக் காங்கரஸ் பகிஷ்கரித்தமையான், காங்கரஸ் கருத்தைச் சைமன் குழு உணரல் இயலாமற் போயிற்று. அஃதொரு பெருங் குறைவாகவே கருதப்பட்டது. அக்குறை போக்கச் செய்யப்பெற்ற சூழ்ச்சிகளுள் வட்டமேஜை மகா நாட்டுச் சூழ்ச்சியு மொன்று. அச்சூழ்ச்சி கருக்கொண்டு பின்னர் உருக்கொண்டது.

முதன்முறைகூடிய வட்டமேஜைமகா நாட்டில் காங்கரஸைக் கலக்குமாறு குறுக்கு வழியில் சூழ்ச்சி செய்யப்பட்டது. அச்சூழ்ச்சி பயன்பெறுதொழிந்தது. எதிர்பார்க்கப்பெற்ற காங்கரஸ் கூட்டுறவின்றியே முதன்முறை வட்டமேஜைமகாநாடுநடைபெற்றது. அம்மகாநாட்டில் பிரதம மந்திரி மொழிந்த சில வுரைகளும், பிறவும் காந்தி-இர்வின் உடன் படிக்கையைப் பிறப்பித்தன. இரண்டாம்முறை கூடப்போகும் வட்டமேஜை மகாநாட்டில் காங்கரஸ் கலந்துகொள்ள இசைந்திருக்கிறது. காங்கரஸ் சார்பாகக் காந்தியடிகள் ஒருவரே மகாநாட்டுக்குச்செல்லுதல் வேண்டுமென்று காங்கரஸ் காரியக்கூட்டம் தீர்மானஞ் செய்திருக்கிறது.

முதன் முறை கூடிய வட்டமேஜை மகாநாட்டில் காங்கரஸ் கலந்துகொள்ளுமா என்று பிரிட்டன் இராஜ தந்திரிகள் தவங்கிடந்தார்கள். இரண்டாம் முறை கூடப்போகும் மகாநாட்டில் காங்கரஸ் கலவாதிருக்குமா என்று அந்த இராஜ தந்திரிகளிற் பலர் தவங்கிடக்கிறாரென்று தெரிகிறது. பிரிட்டன் இராஜதந்திரிகளின் சூழ்ச்சிகள் இவ்வாறு நினைக்கச் செய்கின்றன.

காங்கரஸ் கூட்டுறவு பெறாத சைமன் குழுவின் அறிக்கையை அடிப்படையாகக் கொண்டு சீர்திருத்தம் நல்கினால், உலகம் எள்ளும் என்று கருதி, ஒரு வட்டமேஜை மகாநாடு கூட்டிக் காங்கரஸின் கருத்தைத் தெரிந்து கொள்ளச் சூழ்ச்சி செய்யப்பட்டது. காங்கரஸ்கண்விழித்து கடனாற்றினமையான், பிரிட்டன் இராஜ தந்திரிகள் ஏமாற்றமடைந்தார்கள். காங்கரஸ்பிரதிநிதிகள்சிலர்போந்துமகாநாட்டில் கூக்குரலிட்டுப்பின்னைக்கூடிக்குலாவி விடுவார்கள் என்று அவர்கள் தொடக்கத்தில் எண்ணியிருப்பார்கள். காங்கரஸ் பெரும்போர் துவங்குமென்று அவர்கள் அப்பொழுது எதிர் பார்த்தார்களில்லை. பின்னே காங்கரஸ் சார்பாகநடைபெற்ற அறப்போரால் காங்கரஸின் ஆக்கம் பிரிட்டனுக்கு நன்கு புலனாயிற்று.

காந்தி - இர்வின் ஒப்பந்தத்துக்குப் பின்னர் மறியல் வேலை படிப்படியாகக் குறைந்துபடுமென்று பிரிட்டன் இராஜ தந்திரிகளிற் சிலராதல் கருதியிருப்பர். காந்தி-இர்வின் ஒப்பந்தத்துக்குப் பின்னர் மறியல் மிகச் சிறப்பாக நிகழ்ந்து வருகிறது. ஒப்பந்தத்துக்குப் பின்னரே லங்காஷயர் முதலிய இடங்களில் மில்களின் உறக்கம் அதிகமாயிற்று. பிரிட்டன் இராஜதந்திரிகள்கண் விழித்து நிலைமையை ஆராய்கிறார்கள். ஆராய்ந்து என் செய்கிறார்கள்? இரண்டாவது வட்டமேஜை மகாநாட்டில் காங்கரஸ் கலந்துகொள்ளா தொழிந்தால் போதும் என்று ஸ்ரீ பால்ட்வின் உள்ளிட்டாருஞ் சூழ்ச்சியிலிறங்கி யிருக்கிறார். ஸ்ரீ பால்ட்வின், ஸ்ரீ சர்ச்சிலின் கூக்குரலைப் பொருட்படுத்தாது கடனாற்றி வந்தார். இப்பொழுது அவரது மனோ நிலையும் மாறத் தொடங்கியிருக்கிறது. லங்காஷயர் நிலை நாளடைவில் பலர் மனோ நிலையை மாற்றியே தீரும்.

இரண்டாம் முறை வட்டமேஜை மகாநாடு இந்தியாவில் கூடுமென்றே இந்தியர் பலரால் எதிர்பார்க்கப்பட்டது. அம்மகாநாடு இந்தியாவில் கூடினால் கன்ஸர்வெட்டிவ் பிரதிநிதிகள் கலந்து கொள்ளல் இயலாது என்று அக்கட்சித் தலைவர் ஸ்ரீபால்ட்வின் கூறினார். இஃதென்னை? இதனைக் காங்கரஸ் மகாநாட்டில் கலந்து கொள்ளாதவாறு தடுக்கச் செய்யப்பெற்ற சூழ்ச்சி யென்று கூறலாமன்றோ? இப்பொழுது ஐக்கிய அமைப்புக் கூட்டம் செப்டம்பரில் கூடுதல் ஆகாது என்று அவர்சொல்கிறார். இஃதொரு சூழ்ச்சி! மகாநாட்டில் இந்தியப் பிரதிநிதிகளின் தொகையில் கூட்டல் செய்யப்படுவதால், தங்கட்சிச் சார்பிலுங் கூட்டல் செய்யப்படுதல் வேண்டுமென்று அவர் விரும்புகிறார். இது வேறொரு சூழ்ச்சி! அவர் பாதுகாப்புக்களைப் பற்றி உறுதிமொழி கேட்கிறார். இஃது இன்னொரு சூழ்ச்சி! இவ்வாறு ஸ்ரீ பால்ட்வின் திடீரெனக்கிளம்புவரென்று எவரும் எதிர்பார்க்கவில்லை. ஸ்ரீ லாயிட் ஜார்ஜ் இன்னும் வீறிடவில்லை. அவருஞ் சமயத்தில் கல்விடக் கிளம்பாதொழியார். ஸ்ரீ பால்ட்வின், ஸ்ரீ சர்ச்சில் கூட்டத்தார்க்கு இணங்கும் நிலையிலிருக்கிறாரென்று கூறல் மிகையாகாது. நாளடைவில் கன்ஸர்வெட்டிவ் கட்சிக்குள் இணக்கம் நேர்ந்து விடுமென்றே கூறலாம். அவ்விணக்கம் இந்தியாவின் கோரிக்கைக்கு ஏற்பட்டுள்ள எதிர்ப்பைப் பலப்படுத்துவதாகும். கன்ஸர்வெட்டிவ் கட்சியார் சூழ்ச்சித் துறையிலிறங்க உளங்கொண்டுள்ளார் என்று ஐயுறுதற்குப் பலதிற அறிகுறிகள் தோன்றுமலில்லை. படிப்படியாக எழுஞ் சூழ்ச்சிகளை நோக்குழி, வட்டமேஜை மகாநாட்டில் காங்கரஸ் கலத்தலாகாது என்று கன்ஸர்வெட்டிவ் கட்சியார் கருதுகிறாரென்று எண்ணுதற்கு இடன் ஏற்படுகிறது. சூழ்ச்சிகளைக் கண்டு காங்கரஸ் மகாநாட்டில் கலவாதொழிந்தால், பழியைக் காங்கரஸ்மீதே சுமத்திப் போலிச் சீர்திருத்தம் ஒன்று வழங்கி, உலகிற்குச் சமாதானங் கூறி விடலாமென்று பிரிட்டன் இராஜதந்திரிகள் நினைக்கிறார்களோ என்னவோ தெரியவில்லை.

காங்கரஸ் பிரதிநிதியாகக் காந்தியடிகள் இங்கிலாந்து நோக்க எண்ணியிருக்கிறார். அரசியல் சூழ்ச்சிகளும், கட்டுப்பாடுகளும், நிபந்தனைகளும், இன்னோரன்ன பிறவும் எழுந்து, காங்கரஸ் மதிப்பைக் குலைக்கும் அளவில் திருவிளையாடல் புரியுமாயின், காந்தியடிகள் இங்கிலாந்து நோக்குதல் அரிதாகும்.

இரண்டாம்முறை கூடப்போகும் வட்டமேஜை மகாநாட்டைச் சிறப்புற நடத்த வேண்டிய பொறுப்பு, தொழில் அரசாங்கத்தைச் சார்ந்து நிற்கிறது. தொழில் அரசாங்கம் அஞ்சாது கடனாற்றல் வேண்டும். கன்ஸர்வெட்டிவ் சூழ்ச்சிக்குத் தொழிற் கட்சி இணங்குமாயின், நிலைமை வருந்தக்கூடியதாக முடியும். ஸ்ரீ மெக்டானல்ட் எதிர்கால நிலையை யுணர்ந்து நேரிய முறையில் கடனாற்றுவாராக.

கன்ஸர்வெட்டிவ் கட்சியார்க்கு இந்தியாவில் ஆதரவு கிடைத்தல் அரிது. இந்தியாவில் சிற்சில பிற்போக்குக் கட்சிகளிருத்தல் உண்மை. அக்கட்சிகளால் இந்தியாவைக் கன்ஸர்வெட்டிவ் கட்சியார் தம் வயப்படுத்தல் இயலாது. இந்தியாவின் பிரதிநிதி சபை என்று சொல்லத் தக்கது காங்கரஸ் ஒன்றே. அதை அவமதிப்பது தேசத்தை அவமதிப்பதாகும்.

## தனித்தொகுதி

இரண்டாம் முறை வட்டமேஜை மகாநாடு கூடுதற்கு முன்னர், இந்தியாவில் தனித்தொகுதிக் கூச்சல் துவங்கியிருக்கிறது. எங்கணும் வகுப்பு வாதிகளால் மகாநாடுகள்கூட்டப்படுகின்றன. தனித்தொகுதித் தீர்மானம் நிறைவேற்றப்படுகிறது.

தனித் தொகுதியை விரும்புவோர் விரும்புக. அது குறித்துப் போராடுவோர் ஆடுக. அவ்விருப்பமும் போரும் நாட்டுக்கு நலஞ்செய்யுமா அல்லது சர்ச்சில் கூட்டத்தார்க்குத் துணை செய்யுமா என்பதை அச்சகோதரர்கள் சிந்திப்பார்களாக. தனித்தொகுதி நினைவே நாட்டை மறப்பிப்பதென்பது வெள்ளிடைமலை. சுயராஜ்யப்போர் எதன்பொருட்டு நடத்தப்படுகிறது? நாட்டின் விடுதலையின் பொருட்டா அல்லது வகுப்பு வாதத்தை வளர்த்தற் பொருட்டா? தனித் தொகுதி நேயர்கள் சிந்திப்பார்களாக.

நாட்டில் குறைபாடுகளிருத்தல் உண்மை. அக்குறைபாடுகளைக் களைதற்குத் தனித் தொகுதி தக்க கருவியாகுமா? ஒருபோதும் ஆகாது. தனித் தொகுதியில் நாட்டுப் பிரிவினை நிலவுகிறது. அஃதுள்ள ஒன்று எங்ஙனம் நாட்டுக்கு நலஞ் செய்யும்?

தனித் தொகுதியால் தத்தம் வகுப்பு நலனுறும்என்று வகுப்புவாதிகள்கருதுவது தவறு. கிளைகளுக்குத் தண்ணீர் வார்ப்பதால்மரம் நலனுறாது. மரத்துக்குத்தண்ணீர்வார்த்தால் மரத்தின்உறுப்பெல்லாம் நலனுறும். ஆகவே, தனித்தொகுதி யெண்ணமே நாட்டை மறப்பிப்பதாகும். நாடு நலனுற்றால், எல்லாம் நலனுறுதல் இயல்பு. இதைத் தனித் தொகுதி நேயர்கள் நன்கு கவனித்து நடக்குமாறு வேண்டுகிறோம்.

காங்கரஸ் தேச மகா சபை. அஃது எல்லார்க்கும் உரியது. அதன்கண் வகுப்பு வாதமில்லை. அதில் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், பிராமணர்கள், பிராமணரல்லாதவர்கள், மற்றவர்களெல்லாரும் சேர்ந்திருக்கிறார்கள். அதன் சார்பாக நடைபெற்ற அறப்போரில் எல்லாருங் கலந்து கொண்டனர். அப்போரில் வகுப்பு வாதமே யெழவில்லை.

பண்டித ஜவஹரிலால் பூனாவில் பேசியபோது, ஆங்கெழுந்த ஒரு வினாவிற்கு அவர் இறுத்த விடை கண்டு மகிழ்வெய்துகிறோம். "கடந்த போரில் 70,000 பேர் சிறை புகுந்தார். அவருள் 14,000 பேர் முஸ்லிம்கள். எல்லைப் புறத்தார் போரில் மூழ்கி நின்றார். எல்லா மாகாணங்களைவிட அம்மாகாணமே பல உயிர்களை இழந்தது" என்று பண்டிதர் கூறியதை நேயர்கள் கவனிப்பார்களாக. எல்லைப் புறம் முஸ்லிம்களால் ஆக்கப்பட்ட ஒரு மாகாணமாகும். விடுதலைப் போரில் கலந்துகொள்ள முஸ்லிம்கள் பின்னின்றார்களில்லை. அப்போரில் கலந்துகொண்ட முஸ்லிம்களின் நோக்கமென்னை? நாடு விடுதலை யடைதல் வேண்டுமென்பதே அவர்கள் நோக்கமாகும். ஆகவே முஸ்லிம்கள் எல்லாரும் தனித்தொகுதியில் விருப்புடையார் என்று சொல்வதற்கில்லை.

தனித்தொகுதி விரும்பும் முஸ்லிம் சகோதரர்களுக்குள்ள ஐயப்பாடுகள் ஒழியும் முறையில் மற்றவர்கள் நடந்துகொண்டால் நலன் விளையும். தனித்தொகுதி நாட்டமுடைய மற்ற மற்ற வகுப்பாரிடத்திலேயும் சகோதர நேயத்துடன் தேச பக்தர்களென் போர் நடந்து காட்டல் வேண்டும். ஒரு பக்கம் விடுதலைப் பேச்சும் மற்றொரு பக்கம் தீண்டாமையுங் கொண்டு, 'அரசியலைக் கொணர்ந்து சமூகச் சீர்திருத்தத்தில் நுழைத்தல் கூடாது' என்று சொன்னால், சிறுபான்மையோர்க்கு ஐயப்பாடு தோன்றுதல் இயல்பே யாகும். ஆதலால் தீண்டாமை முதலிய கொடுமைகள் ஒழிய ஒழிய நாட்டில் சகோதர நேயம் வளர்ந்தோங்கும்.

தனித் தொகுதி சமரசத்தை வளர்த்தல் அரிதாகலின், அதை வேண்டாமென்று காங்கரஸ் கூறுகிறது. தனித்தொகுதியுள்ளவரை 'இந்தியர்' என்னும் ஒருமையுள்ளம் தோன்றாது. ஒருமையுள்ளத்தை யுண்டுபண்ணவல்லது கூட்டுத் தொகுதியே யாகும்.

தனித் தொகுதி நேயர்கள் நாட்டின் ஒருமைப்பாடு கருதியும், விடுதலை கருதியும் கூட்டுத் தொகுதியில் கருத்திருத்துமாறு வேண்டுகிறோம்.

## இந்திய லார்ட்!

முதல் முதல் இந்தியாவில் லார்ட் பட்டம் பெற்றவர் ஸ்ரீ சின்ஹா என்பது நேயர்கட்குத் தெரியும். தந்தை இறந்த பின்னர் அப்பட்டம் மைந்தருக்கு வருதல் வேண்டும். தந்தை சின்ஹா இறந்து விட்டார். மைந்தர் சின்ஹா அப்பட்டந் தாங்கல் நேர்ந்தது.

இப்பொழுதுமைந்தர் லார்ட் சின்ஹா இங்கிலாந்தில் வதிகிறார். ஆனால் அவர் லார்ட்ஸ் சபையில்அமரும் உரிமைபெற்றிருக்கிறாரில்லை. இதற்குச் சொல்லப்படுங் காரணமென்னை? லார்ட்ஸ்சபையில் அமர்தற்குத் தந்தையார் இறந்தபின் மைந்தர், தாம் தமது தந்தையின் நியாயமான மனைவியின் புதல்வர் என்பதை நிறுவிக் காட்டுதற்குத் தாய் தந்தையர் திருமணப் பதிவுச் சீட்டும், தமது பிறப்புப் பதிவுச் சீட்டும் வேண்டற்பாலனவாம். தந்தை லார்ட் சின்ஹா மணவினை புரிந்த காலத்தும், அவர் மைந்தர் லார்ட் சின்ஹாவை ஈன்ற காலத்தும் குறிப்பிட்ட பதிவுகள் ஒழுங்கு முறையிலில்லை. அந்நாளில் இல்லாதனவற்றை மைந்தர் லார்ட் சின்ஹா எங்ஙனங் கொணரவல்லார்? பாவம் விழிக்கிறார்! தந்தை லார்ட் சின்ஹா பட்டம் பெற்றபோதும், அவர் லார்ட்ஸ் சபையில் அமர்ந்து கடனாற்றிய போதும் இவ்விதிகள் கவனிக்கப்படவில்லை போலும்! முதல் முதல் லார்ட் பட்டம் பெறுவோரை இவ்விதிகள் பாதிப்பதில்லையோ என்னவோ தெரியவில்லை. லார்ட்ஸ்சபை விதிகள் ஒருபால்கிடக்க.

லார்ட் சின்ஹா, லார்ட்ஸ் சபையில் அமரும் உரிமை யிழந்து கிடக்கிறார். அதுகுறித்து நீதிமன்றத்தில் நியாயம் பெறவும் அவர் ஒருப்படவில்லையென்று அறிகிறோம். அங்கே நியாயம் பெறுதொழிந்தால் பெருந் தொல்லையாகுமே என்று அவர் அஞ்சுகிறார் போலும்! "நீதிமன்றம்போதல்மதிப்புக்குறைவு" என்று அவர் சொல்கிறாராம். லார்ட் பட்டந் தாங்கியும் லார்ட்ஸ் சபையில் அமரும் உரிமை யிழந்து நிற்றல் எத்தகை மதிப்பு என்பது விளங்கவில்லை. உண்மையாக லார்ட் சின்ஹா தமக்கும் தாம் பிறந்த நாட்டுக்கும் மதிப்புத் தேட வேண்டுமானால், லார்ட் பட்டத்தைத் துறந்து, இந்தியா திரும்புதல் வேண்டும். மானமுள்ள இந்தியா இந்நாளில் பட்டம்பதவிகளைத் துறந்திருத்தல் லார்ட் சின்ஹாவுக்குத் தெரியும்.



# தீண்டாதவர் நிலை

## உழைக்குந் தொண்டரின் அவதி

மகாத்மா காந்தி 'யங்இந்தியா'வில் எழுதுவது வருமாறு:—

இந்துமதாபிமானிகள் யாவரும் பின்வருவனவற்றைக் கவனிக்கவேண்டுகின்றேன்.

### நிருபர் கடிதம்

"குகலூர் என்பது கோவை ஜில்லாவிலுள்ள ஒரு சிறிய கிராமம். இக்கிராம வாசிகளனைவரும் விவசாயிகள். இக்கிராமத்திலே திரு. சுப்பண்ண கவுண்டரென்ற உண்மைக் காங்கரஸ்வாதி ஒருவர் வசித்து வருகிறார். அவர் சுயநலமின்றிக் கதரியக்கம் எங்கணும் பரவி நிலவவேண்டுமென்று அல்லும் பகலும் உழைப்பதால் அவரை யாவரும் "காந்தி சுப்பண்ண கவுண்டர்" என்று அன்புடன் அழைப்பது வழக்கம். கடந்த ஆறுண்டுகளாகத் தாலூக்கா காங்கரஸ் கமிட்டித்தலைவராகவும் காரியதரிசியாகப் பல முறையுமிருந்து அவர் தொண்டாற்றி வருகிறார். அவருடைய உழைப்பினாலேயே அவ்வூர்வாசிகளும் மற்றும் தாலூக்காவிலுள்ள அனைவரும் கதரின் மகிமையை அறிந்திருக்கின்றனர். அவர் 'யங்இந்தியா' சந்தாதாராகையால் தங்களுடைய இயக்கத்தை முற்றும் அறிவார். சென்ற அறப்போரில் ஏராளமான தொண்டர்களைக் கூட்டிப் பல கிராமங்களில் கள்ளுக்கடைகளை மறியல் செய்து வெற்றி பெற்றார். உடல், பொருள், ஆவிமூன்றையும் தத்தம் செய்ய அவர் துணிவுற்றமையினால் அதிகாரிகள் அவரைத் தடைப்படுத்த முடியவில்லை. அவரது உழைப்பு இல்லையேல் அத்தாலூக்கா தன் உறக்கத்தினின்றும் விழித்திராது. அவர் தென்னாட்டிலுள்ள உண்மைத்தொண்டர்களில் ஒருவர். ஆனால் இப்பொழுதோ அக்கிராமத்தினர் அனைவரும் அவரை எதிர்க்கும்படியான நிலைமையொன்று ஏற்பட்டிருக்கின்றது. நான் இத்துணை நாட்களாக அவருடன் கூடவிருந்து உழைத்து வருகிறபடியால் இப்பொழுது தங்கள் உதவியை நாடுகிறேன்.

### மூட நம்பிக்கை

நிலைமையைத் தெளிவாக விளக்கக்கிராம வாசிகளினுடையபழக்கவழக்கங்களைக்கொஞ்சமாவது தங்களுக்கு முன்னர் அறிவிக்க வேண்டும். கிராமவாசிகளனைவரும் வைதிகர். பரம்பரையாகக் கையாளப் பட்டு வரும்பழக்க வழக்கங்களில் மூட நம்பிக்கை மிகுதியும் அவர்களிடம் காணலாம். பிறர் தூண்டுதலுக்கோ அன்றி வாதத்திற்கோ அவர்கள் திரும்பமாட்டார்கள். எவரேனும் தீண்டாமையை விலக்க வேண்டிய அவசியத்தைக் குறித்துப் பேசினால் அவர் ஏளனம் செய்யப்படுவதுடன், மதத்துரோகி, அதர்மி எனவும் திட்டப்படுவர். இக்கிராமத்தில் தீண்டாதவர்களுடைய வீடுகளும்,நெருங்கக்கூடாதவர்களினுடைய குடிசைகளும் இனிமையான இடங்களிலே இருக்கின்றன. அவர்கள் உயர் சாதியினருடைய நிலங்களில் வேலைசெய்துபிழைத்து வருகிறார்கள். நெருங்கக்கூடாதவர்களின் குடியிருப்பிலே கிணறுஇருக்கின்றது; தீண்டாதவர்களின்வாசஸ்தலத்திலே இல்லை.

திரு. சுப்பண்ண கவுண்டருக்குத் தீண்டாதவர்களின் குடியிருப்பின் அருகிலே தோட்டமொன்றிருக்கின்றது. அவர்தீண்டாதவர்களைத் தம் தோட்டத்திலுள்ள கிணற்றினின்றும் தண்ணீர் எடுத்துப் போக அனுமதிக்க வேண்டுமென்று பல நாட்களாக எண்ணி வந்தார். சுமார் ஒருமாத காலத்திற்கு முன்னர் அவர் தமது தோழர் ஒருவருடன் அங்குச் சென்று தீண்டப் படாதவர்களைத் தண்ணீர் எடுத்துப் போக அனுமதித்தார். பின்னர் அவரும் அவர் நண்பரும் அக்கிணற்றிலேயே முழுகினர். இச்செய்தி காட்டுத் தீப்போலஊர்முழுவதும் நொடிப்பொழுதில் பரவி விட்டது.கிராமவாசிகள் இச்செய்கையை ஒருபெரும் பாவமென எண்ணி அவரைக் கண்டித்தனர். அவரது வேலையாட்களனைவரும் பாபம்செய்தவரிடம் வேலை செய்யலாகாதென வேலையை விட்டுவிட்டனர். கிராமத்தில் இருகட்சிகள் தோன்றின. திரு. சுப்பண்ண கவுண்டரும் அவர் நண்பர்கள் நால்வரும் ஒருசார்பு. இரண்டொரு விஷமிகளும் கிராமவாசிகளும்மற்றொருசார்பு. தீவிரவைதிகர்களான கிராமவாசிகள் திரு. சுப்பண்ண கவுண்டரும் அவரது தோழர்களும் பார்ப்பனரால் பிராயச்சித்தம்செய்யப்படவேண்டுமெனச் சொல்லி வருகின்றனர். திரு. சுப்பண்ண கவுண்டர் அறவே இதைத் தள்ளிவிட்டார். ஆகவே கிராமவாசிகள் அனைவரும் அவரைச் சமூக பகிஷ்காரம் செய்கின்றனர். அவருடைய நிலத்திலும் அவரது தோழர்கள் நிலத்திலும் வேலைசெய்வோர் பயமுறுத்தப்படுகின்றனர்.

### பகிஷ்காரம்

கொஞ்ச நாள் சென்ற பின்னர் திரு. சுப்பண்ண கவுண்டரின் கீழ்வேலைசெய்யும் ஆளொருவன் கிராமத்தின் பொதுக்கிணற்றில் நீரெடுக்கச் சென்றான். ஆங்குக் குழுமியிருந்த கிராமவாசிகள், அவன் திரு. கவுண்டரிடம் இன்னும் வேலை செய்து வருவதால் கிணற்றைத் தொடக்கூடாதென்றும், தொட்டால் கிணறு அசுத்தமாகி விடுமென்றும் தடுத்துவிட்டார்கள். அவன் உடனே ஓடிவந்து திரு. கவுண்டரிடம் தெரிவித்துக்கொண்டான். அக்கிணறு யாவருக்கும் பொதுவாகையால் யாவரும் அதில் நீரெடுக்க உரிமையுடையவரென்று எண்ணித்தமது நண்பருடன் கிணற்றை அண்மி அவ்வாளைத் கிணற்றினின்றும் நீரெடுக்கச் சொன்னார். கிராமவாசிகளனைவரும் அவன் கீழே இறங்கினால் அடித்துவிடுவோமெனக்கூறிப் பயமுறுத்தித் தடுத்துவிட்டனர்.நண்பர்களின் தொந்தரவின்மேல் திரு. கவுண்டர் இதைப் போலீசுக்கு அறிவித்துவிட்டார். போலீசார் இதை விசாரித்து மாஜிஸ்ட்ரேட்டுக்குத் தெரிவிக்க, அவர் ஜூன்மீ முதல் தேதியன்று வாயிதாபோட்டிருக்கின்றார். சுற்றுப்புறத்திலுள்ள பல கிராமவாசிகள் திரு. கவுண்டரின் தைரியத்தை மெச்சினாலும் இக்கிராமவாசிகள் மூடத்தன்மையாக இவரை எதிர்த்து வருகின்றனர். திரு. கவுண்டர் தமது செய்கையில் திடமான நம்பிக்கையுடன் கொஞ்சங்கூட தமது நோக்கத்தை விடாமலிருக்கின்றார். கிராம வாசிகளோ அவர் வேலைகள் பலவற்றிற்கும் இடையூறு செய்து வருகின்றனர். அவர் தமது நோக்கம்முற்றும் நிறைவேறுதலுடன் தம்முடையவும் தமது தோழர்களினுடையவும் வீட்டு வேலைகள் செய்ய முடியாதவைகளாயிருக்கின்றன. ஜனங்களின் அறியா. மதப்பற்றும், விஷமிகளினுடைய சொந்த விரோதமும் திரு. கவுண்டரின் நண்பர்களுக்கு மிகவும் இடையூறுகளை விளைவித்து வருகின்றன. திரு. கவுண்டரும் அவர்தோழர்களும் பொதுக்கிணற்றிற்கும், கிராம ஆலயத்திற்கும் செல்லக்கூடாதவாறு தடுக்கப்பட்டிருக்கின்றனர். நான் திரு. கவுண்டருடன் உழைக்கும் அவர் நண்பன். திரு. கவுண்டர் தம் நோக்கத்தை நிறைவேற்றவும் கிராமவாசிகளைச் சமாதானப்படுத்தவும் கூடுமானஒரு வழியைத் தாங்கள் இதுசமயம் தெரிவித்தால் மிகவும் நலமாயிருக்கும்."

### அடிகள் விடை

"திரு. கவுண்டரை அவரது தைரியத்திற்கும், பிடிவாதத்திற்கும் நாம் பாராட்ட வேண்டும். நான் இந்த ஒரே புத்திமதியைத் தான் அவருக்குச் சொல்லலாம். அவர் கிராமவாசிகளின்மீது வெறுப்புசிறிது மடையாமல் தீண்டாதவர்களைக் காப்பாற்ற யாவற்றையும் துறக்கத்தயாராயிருக்கவேண்டும். முடிவில் கிராமவாசிகள் அவரைத்தொந்தரவு செய்வதினின்றும் தாமாகவிலகுவர். ஆரம்பத்தில் அவரது பொறுமையை அவரது பயந்த தன்மையென எண்ணுவர். முடிவிலே அவரது பொறுமையின் பின்னே யிருக்கும் பலத்தைக் கண்ணுறுவர். அவர் பொறுமையுடன்பிறரைமன்னித்தாலும்தீண்டாதாரைக் காப்பதில் கற்றூண் போலிருப்பதைக் காணவும்அது அவர்கள்மனதில்சுடும்.நாட்கள்செல்லச்செல்ல திரு. கவுண்டர் மீதுள்ள வெறுப்புவிருப்பாக மாறும். ஆனால் இந்நிலை நிகழ அவர்முற்றும்துறக்கத்தயாராயிருத்தல் வேண்டும். கிராம வாசிகளின் சமூக பகிஷ்காரத்தினாலே அவர்தம் நிலங்களைப் பாழாகக்கிடக்க விட வேண்டிய நிலைமையும் நிகழும். அவருடன் நான்கு நண்பர்களாவது இருப்பது சற்று ஆறுதலை அளிக்கிறது. அவர் இந்நண்பர்களை இழந்தாலும், தமது நோக்கத்தை நிறைவேற்றத் தைரியமுடையவராயிருக்க வேண்டும். முடிவில் அவர் வெற்றியுறுவார் என்பது திண்ணம். கடவுள் எவனை ஆசிர்வதிக்க விரும்புகின்றாரோ அவனைப் பன்முறையும் மிகுதியும் சோதிக்கிறார்."

# சுதந்திர இந்தியாவில்

## "பார்ப்பனர் அச்சமுற இடமிராது"

மகாத்மா காந்தி 'யங்இந்தியா'வில் எழுதுவது வருமாறு:—

### நிருபர் கடிதம்

ஒரு பார்ப்பன நிருபர்சென்னையினின்றும் பின் வருமாறு எழுதுகிறார்: "திரு. சென்குப்தா தமது தென்னாட்டுச் சுற்றுப் பிரயாணத்திலே ஒரு சமயம் கராச்சி காங்கரஸ் தீர்மானத்தைச் சுட்டிக்காட்டி சுயராஜ்ய அரசாங்கம் பார்ப்பனரை அழிக்கச் சட்டங்கள் நிறைவேற்றுமென மொழிந்தார். ஆகையினால் பார்ப்பனரும், வைதீக ஹிந்துக்களும் ஒருவாறு பயந்து சந்தேகமுறத் தொடங்கிவிட்டனர். ஆகவே கீழ்க்காண்பவற்றைக் குறித்துத் தாங்களும், காங்கரசும் கொண்டுள்ள எண்ணத்தை விரித்துக் கூறவேண்டுகிறேன்.

1. தீண்டாமையைக்குறித்துள்ள தீர்மானம்.

2. சுயராஜ்ய ஆட்சியிலே அரசாங்கம் மத விஷயங்களில் நடுவு நிலைமை வகிக்குமெனத் தாங்களும், காங்கரசும் சொல்லி வருவதன் பொருள் என்ன?

"தென்னாட்டிலே பார்ப்பனரும், பெரும்பான்மையாக ஹிந்துக்களும் வேதங்களிலும், சாஸ்திரங்களிலும் முழு நம்பிக்கையுடையவர்களெனத் தங்களுக்குத் தெரிந்திருக்கும். ஆகவே அவைகளைக் கையாள எவ்வகுப்பாருக்கும் எவ்வித இடஞ்சலுமிருக்கக் கூடாது.

'பார்ப்பனர்களாகிய நாங்கள் சத்தியாக்கிரக இயக்கத்தின் பயனையும், நன்மையையும் அறிந்திருக்கின்றோம்.நாங்கள் எப்பொழுதும் எவ்வித இடைஞ்சலுமின்றிப் பன்னாட்களாகக் கையாளப்பட்டுவரும்மதக்கோட்பாடுகளைக் கையாண்டுவரச் சுதந்திரமிருக்க வேண்டும். இதைக் குறித்த எச்சட்டத்தையும் எதிர்த்து நாங்கள் சத்தியாக்கிரகம் செய்வோம். தீண்டாதவர்களுக்கு அரசாங்கத்தில் வேலைகள் கொடுப்பதைக் குறித்தும், பயிரிட நிலங்கள் கொடுப்பதைக் குறித்தும், அரசியல் சலுகைகளும் பொருளாதார சலுகைகளும் காண்பிப்பதைக் குறித்தும், ஒருவருக்கும் எவ்வித ஆட்சேபமுமில்லை. பிறரது மதக் கோட்பாடுகளைப் பாதியாத எந்தஉரிமையும் சலுகையும் அவர்களுக்களிப்பதில் ஒருவருக்கு மாட்சேபமிராது. இன்றும் தீண்டாதவர்கள் பொதுக் கிணறுகளையும், சாலைகளையும், கல்வி நிலையங்களையும் உபயோகித்து வருகின்றனர். இவைகளில் அவர்களுக் கிடங்கொடுக்க எவ்வித ஆட்சேபமுமில்லை. ஆகவே,விஷமத்தனமாகப்பொருள்கொள்ளாமலிருக்க இப்பொழுதே விளக்கமாக அதன் பொருளை விரிக்கவேண்டுகின்றேன்."

### அடிகள் விடை

சுயராஜ்ய அரசாங்கம் பார்ப்பனர்களை நசுக்குமென்று திரு. சென்குப்தா சொல்லியிருப்பாரென்று நான் நம்பவில்லை. காங்கரஸ் தீர்மானம் தெளிவுற நிலவுகின்றது. வருங் காலத்தைக் குறித்து அநாவசியமாக நிருபர் தம்மைப் வதைத்துக் கொள்ளுகின்றார். காங்கரஸ் தீர்மானம் அரசியல் திட்டத்தில் ஒரு பாகமாக இன்னும் நிறுவப்படவில்லை யென்பதை அவர் ஞாபக மூட்டிக்கொள்ளவேண்டும். அப்பொழுது அதன் பொருளை விளக்க நானே அன்றி வேறொருவரோ வேண்டுவதில்லை. சட்டத்தினால் நிறுவப்பட்ட,நீதி ஸ்தலங்கள் அதைக்கவனிக்கும்.

ஆனால் மத நடுவு நிலையையும் தீண்டாமையையும் குறித்த காங்கரஸ் தீர்மானம் எவ்வாறு பொருள்படக் கூடுமென்று எனக்குத் தோன்றுகிறதோ அதை இங்கு மகிழ்வுடன் எழுதுகிறேன். இத்தீர்மானம் எவ்வித எதிர்ப்பு மில்லாமையால் அரசியல் திட்டத்தில்நிச்சயமாய் இடம் பெறும்.நிருபரும் காங்கரசின் அபிப்பிராயத்தையே ஆதரிக்கின்றார். மத நடுவு நிலை என்றால் அரசாங்க மதமென ஒரு மதமிராது. தவிர எம் மதத்திற்கும் அரசாங்கம் சலுகை காட்டாது. தீண்டாமை சட்டத்திலிடம் பெறாது. தீண்டாதவர்களும் மற்றவரைப் போல் சம உரிமையுடையவராயிருப்பார்கள். ஆனால் பார்ப்பனர் மற்றவரைத் தொட்டுத்தான் தீர வேண்டுமென பலவந்தம் செய்யப்படமாட்டார். அவர் தம்மையே ஒரு தீண்டாதவராகச் செய்துகொள்ள அவருக்குமுழுஉரிமையுமுண்டு. தனியாகக் கிணற்றையும், ஆலயத்தையும், கல்வி நிலையங்களையும் மற்றும் எவற்றைத் தமமால் (அமைத்துக்) கொள்ள முடியுமோ அவைகளை எல்லாம் அவர் கொள்ளுவதில் எவ்வித ஆட்சேபமுமில்லை. இவைகளினால் பிறருக்கு எவ்வித இடைஞ்சலும் விளையக்கூடாது. ஆனால் இப்பொழுது நிகழ்வது போன்று பொதுச் சாலைகளையும், பொதுக் கிணறுகளையும் உபயோகிக்கும் தீண்டாதாரைப் புடைப்பது போன்ற கொடுஞ் செயல்களைப் புரிய அவருக்கு எவ்வித சுதந்திரமுமிராது. சுயராஜ்ய ஆட்சியிலே எல்லா ஹிந்துக்களும் செல்லும் ஆலயங்களில் தீண்டாதாரை மாத்திரம் விலக்குவது போன்ற அழுக்குகள் துடைக்கப்பட்டு விடும். வேதங்களினுடையவும், சாஸ்திரங்களினுடையவும் அதிகாரங்கள் புறக்கணிக்கப் படமாட்டா.ஆனால் அவற்றிற்குப் பொருள் கூறுவது தனி மனிதர்களின் இஷ்டத்திற்கு விடப்படமாட்டாது. காரியங்களில் இவைகள்எவ்வளவுதூரம் அனுபவத்தில் நடத்தப்பட்டு வருகின்றனவென்பதைப் பொறுத்தே முடிவு செய்யப்படும். மனச்சாட்சிப்படி நடத்தல் மதிப்புப் பெறும். ஆனால் அதற்காகப்பிறருடையஉரிமைகளோ பொது ஜனங்களின் சன்மார்க்கமோ குறைவுபடல் ஆகாது. ஒரு மதத்தின் பேரிலோ அன்றி ஒரு வழக்கத்தை முன்னிட்டோ எம் மனிதனும், எவ்வகுப்பும் உயர்ந்தவரென்று அக்கறை அடைய சட்டத்தின் முன்னர் இடமிராது. ஆனால் இவ்வளவும் என்கனவேயாகும்.நான் காங்கரஸ்அல்ல.காங்கரஸ் வேறு விதமாக நடக்கவேண்டுமென்று விரும்புகிறவர்கள் விரைவில் அதைச்சேர்ந்து தம்மைப் போன்ற கருத்துடையவர்களும் அதில் சேருமாறு செய்யட்டும். காங்கரஸ் என்பது பொதுஜன இஷ்டத்தையே குறித்துக் காட்டுகிறது. அதன் அமைப்பும் போதுமான அளவு விரிவுள்ளதாகவே இருக்கிறது.

# ஐரோப்பியரும் பாதுகாப்புகளும்

## காந்தியடிகளின் விளக்கம்

காந்தியடிகளைச் சில ஐரோப்பிய வாலிபர்களும், பெண்களும் சந்தித்துப் பேசினர். அவர்களின் வேண்டுகோளின்மேல் அடிகள் எதிர்கால இந்தியாவில் ஐரோப்பியர் நிலையைக் குறித்துக் காங்கிரசிற்குள்ள நோக்கத்தை அவர்களுக்கு விரித்துரைத்தார்.

"காங்கரசு ஐரோப்பியரை விரோதிக்கவில்லை. அவர்களின் நட்பைப் பெரிதும் விரும்புகின்றது. காங்கிரசானது ஆதியிலே ஹியூம்என்றதுரைமகனால் கூட்டப்பட்டுப் பல பாராளுமன்ற உறுப்பினரால் தலைமை வகிக்கப்பட்டிருக்கின்றது. நீங்கள் காங்கரசின் சரித்திரத்தையும்நோக்கங்களையும்படித்தால் காங்கிரசானது எப்பொழுதுமே எவ்வகுப்புகளையும்சொத்தப்பாத்யங்களையும் பாதிக்க விரும்பியதேயில்லை என்பதை அறிவீர்கள். ஆகையால் நீங்கள் காங்கிரஸ் நோக்கத்தில் அனுதாப முடையவர்களானால் உடனே அதில் திரளாகச் சேருங்கள். நீங்கள் உங்கள் நாட்டைத் தங்கு தடையின்றி ஆள்வது போன்று நாங்களும் எங்கள் நாட்டை எவ்விதத் தடையுமின்றி ஆளவிரும்புகின்றோம். ஐரோப்பியர்கள் தங்களுக்கெனப் பாதுகாப்புகளும், வியாபாரச்சுதந்திரமும் கேட்பது நியாயமன்று. நீங்கள் 150 ஆண்டுகளாக அனுபவித்த இப்பாதுகாப்புகளையும் மற்றவைகளையும் நாம் இப்பொழுது கொண்டால் அது உண்மையான நட்பாகாது. அப்பொழுதிருவருக்கும் சமத்துவமில்லை. காங்கிரசு உங்கள் உதவியையும், நட்பையும், திறனையும் எப்பொழுதுமே வேண்டும். இந்நிலைஉள்ள ஒத்துழைப்பு சமத்துவமற்ற நிலைமையிலுள்ள ஒத்துழைப்பாக ஆகா." என்று கூறினார்.

## உதிர்ந்த மலர்கள்

காந்தி - இர்வின் ஒப்பந்தம் நாம் கோரிய அளவுக்குவராவிடினும்இளைஞர்களாகிய நாம், திரு. காந்தியடிகளின் தலைமைக்குக் கீழ்ப் பட்டு ஒப்பந்தத்தை முற்றிலும் நிறைவேற்ற வேண்டும்.

—ருக்மணி அம்மையார்.

* * *

நான் அவர்கள் வாயினின்றே தாங்கள் ஒரு கணவனை அடையச்செய்யுந்தந்திரங்களையும் சூழ்ச்சிகளையும் கேட்டிருக்கிறேன் ......... மற்றப் பெண்களைவிட நாகரிகமாக இருக்கிறவரும் மற்றவர்கள் கவனத்தைத் தங்களிடம் ஈர்க்கச் செய்கின்றவருமான பெண்களிடம் ஜாக்கிரதையா யிருக்கவேண்டு மென்பதையும் அறிந்திருக்கிறேன். அவைகள் வெறும் வேஷம் என்பதையும் தெரிந்து கொண்டு விட்டேன்.

—ஸான்டாஸ். கஸானி.

* * *

ஒருவர் கத்தோலிக்கராகவும் அதேசமயத்தில் அபேதவாதியாகவு மிருக்க முடியாது; கூடாது.

—போப். பைஸ்.

* * *

இன்று நீக்ரோவர் தங்கள் மரபினரின் சுதந்திரத்திற்குப் பாடுபட வேண்டுமென்று முற்றிலும் ஆவலா யிருக்கின்றனர். அவர்கள் தங்கள் மரபினரைப் பொருளாதார வகையிலும், கைத் தொழில்களிலும், வியாபாரத் துறையிலும் உயர்த்த வேண்டுகின்றனர். இதற்கு அவர்கள் தங்கள் முழுத்தைரியத்தையும் வரவழைத்துக் கொள்ளுவதுடன் இக்காரியத்தை முற்றிலும் நிறைவேற்ற வேண்டிய அளவு தைரியத்தையும் பெறவேண்டும். இதை எப்பொழுதும் இழவாமலிருக்கவேண்டும். இதில்தான் யாவரும் தவறி விடுகின்றனர். தங்கள் நோக்கத்தைப் பூர்த்தி செய்யும் முன்னரே சோர்ந்து உட்கார்ந்து விடுகின்றனர்.

—மார்கஸ் கார்வி.

* * *

தொண்டர்களின் பொறுமையை யான் பாராட்டுகின்றேன். அவர்களை ஆங்கிலேய சார்ஜண்டுகளும்இந்தியப்போலீசுகாரர்களும் தடியாலும், துப்பாக்கியாலும் அடித்தபோது என் கண்களினின்றும் நீர் பெருகிற்று. அப்பொழுதுதான் நான் ஓர் ஆங்கிலேயனா யிருப்பதைக் குறித்து மிகவும் வெட்கமடைந்தேன். ஆனால் தொண்டர்கள் அத்துன்பங்களை வாய்திறவாது அஹிம்சா தர்மத்துடன் ஏற்றுக்கொண்டதைக் காணவே, நானும் ஒரு மனிதனாயிருக்கச் சற்று ஆறுதலளித்தது. உங்கள் முன்னர் நான் ஆங்கிலேயரின் சார்பாக என்னையும் ஏனைய ஆங்கிலேய சகோதரர்களையும் மன்னிக்கும்படியாக உங்களை வேண்டுகின்றேன்.

—எல்வின் பாதிரியார்.

* * *

இந்தியாவின்பிற்காலநன்மையும் வாழ்வும் இளைஞர்களைப் பொறுத்தனவா யிருக்கின்றபடியால் அவர்களுக்கெனத் தனிக் கழகங்கள் நிறுவப்படவேண்டும். ஆகவே அவர்கள் ஒருங்கேகூடி ஆலோசித்து அதன் முடிவுப்படி ஆக்கவேலையில் இறங்கும்படி தமிழ்நாட்டு வாலிபர்களை வேண்டுகிறேன்.

—பி. வி. ஹனுமந்தராவ்.

* * *

நாட்டின் பணியை இளைஞர்கள்தான் மேற்கொள்ளவேண்டும். முதியோர் அவர்கள் எத்துறையிற்செல்லவேண்டுமெனக் காட்டத்தான் முடியும். சென்ற அறப்போரில் வாலிபர்கள்தான் தடிகளையும், துப்பாக்கிகளையும், சிறைகளையும் எதிர்த்தனர். அவ்வாறே ஒப்பந்த காலமாகிய இந்நாளில் அவர்கள்தான் ஆக்கவேலையில் அதிசயிக்கத்தக்க விதமாய் இறங்கவேண்டும்.

—கே. பாஷியம் அய்யங்கார்.

* * *

இன்று ஐக்கியமுறை ஆட்சிகொள்கையை ஒப்புக்கொண்டிருக்கிற மன்னர்கள் அதைப் பூரணமாகவும் நிறைவேற்றிவைப்பார்களென நம்புகின்றேன். எம்மன்னரும் நியாயமாக ஆட்சி செய்ய விரும்பினால் அவர் எதற்கும் அஞ்சவேண்டுவதில்லை.

—சர். பட்டாணி.

* * *

சிலர் சில சமஸ்தானங்கள் சரிவர ஆளப்படுவதில்லை எனப்புகார்செய்கின்றனர். ஆனபடியினால் பிரிட்டிஷ் இந்தியாவில் என்ன நடக்கின்றது? வகுப்பு வேற்றுமைப்பேய் அங்கு எரிக்கு கொண்டிருக்கவில்லையா? ஆகவே நாம் பெருவியாதியை முதலில் ஒழித்துவிட்டு மற்றதைப்பின்னர் ஆற்றலாம்.

—சர். பட்டாணி.

## பர்மாவில் சமரச முயற்சி

### தலைவர்களது வேண்டுகோள்

பல இந்தியத் தலைவர்களும் பல பர்மியத் தலைவர்களும் கையொப்பமிட்டு அடியிற் கண்ட வேண்டுகோளை வெளியிட்டிருக்கின்றார்கள்:—

பர்மிய கிராமங்களில் இந்தியர்கள் பல வருஷங்களாகக் குடியேறி யிருக்கிறார்கள். அவர்கள் தங்களது பர்மிய சகோதரருடன் முற்றிலும் ஒற்றுமையாகவும் சமரஸமாகவும் வாழ்ந்து வந்திருக்கிறார்கள். இதனால் சமீபத்தில் பர்மியருக்கும் இந்தியருக்கு மேற்பட்டுள்ள தொல்லை பர்மாவின் நலத்தை விரும்புகின்றவர்களுக்கெல்லாம் ஆச்சர்யத்தை உண்டாக்கியிருக்கின்றது. இதற்கான பொறுப்பு எந்த வகுப்பார்மீது இருக்கிறதென்பதை நிர்ணயிப்பது எங்கள் வேலையல்ல. இந்நிலைமை மிக்க வருந்தத்தக்கது. இது அசாதார—மான நிலையுமல்ல. ஏனெனில் உடன்பிறந்த சகோதரர்கள்கூடச் சில சந்தர்ப்பங்களில் சச்சரவு செய்துகொள்ளுகிறார்கள். சச்சரவு செய்தபோதும் அவர்களது சகோதரத்துவம் போவதில்லை. அவர்கள் எவ்வளவுக் கெவ்வளவு சீக்கிரம் சிநேகமாகிறார்களோ அவ்வளவு இருதாத்தாருக்கும் நல்லது. சில கிராமங்களில் இரு சமூகத்தினருள்ளும் மனஸ்தாப மிருந்து வருவதை அசட்டை செய்வதில் பிரயோசனமில்லை. அத்தகைய நிலை கிராம வாசிகளது பொருளாதார, சமூக நிலையைக் குலைக்கும். ஏற்கெனவே இவை வெகுவாகக் குலைந்து போயிருக்கின்றன. இதனால் ஒரு போதும் நன்மை ஏற்படமுடியாது. இந்த நாட்டின் செழிப்பு பெரிதும் விவசாயத்தையே நம்பி யிருக்கிறது. சமாதான நிலையில்லாவிட்டால் விவசாயம் செய்து கொண்டு போகமுடியாது. இதனால் முன் நடந்தவற்றை மறந்து ஒருவருக்கொருவர் அன்பு கொண்டு வாழவேண்டுமென கிராமங்களிலுள்ள இந்தியர்களையும் பர்மியர்களையும் நாங்கள் வேண்டிக் கொள்ளுகிறோம். இது அவர்கள் தங்கள் நன்மையையும் தேச நன்மையையும் உத்தேசித்துச் செய்யவேண்டிய கடமைகளாகும்.

பலாத்காரத்தினால் பலாத்காரமே உண்டாகும். அதனால் உண்டாகும் மதமானது நல்லெண்ணம், சகிப்புத்தன்மை, அஹிம்சை இவற்றைப் பாதிக்கிறது. இரு சமூகத்தாரும் தங்கள் மதபோதனைப்பட நடக்கவேண்டும். இருசமூகத்தினரும் முன்போல் பரஸ்பர நட்பும் நல்லெண்ணமும் கொண்டு வாழ்ந்துவர ஆரம்பிக்கவேண்டும். எங்களது வேண்டுகோள் வீணாகாதென நாங்கள் நம்புகிறோம்.

## பணிச்சாருடையவர் தர்ம வித்யாசாலை

### கண்டவராயன்பட்டி

இவ்வித்தியாசாலையின் முதலாவது ஆண்டு நிறைவுவிழா வைகாசிமீ 30௳ மாலை 4 மணிக்கு மகிபாலன்பட்டி - பண்டிதமணி திரு. மு. கதிரேசஞ் செட்டியாரவர்கள் தலைமையில் சிறப்பாக நடைபெற்றது. முதலில் கடவுள் வணக்கமும் பள்ளிக்கூட அறிக்கையும் தலைமை ஆசிரியர் திரு. நாராயணசாமி பிள்ளையவர்களால் வாசிக்கப் பட்டன. கீழச்சிவல்பட்டி உயர்தரப் பள்ளிக்கூடத் தலைமை ஆசிரியர் திரு. சுப்பிரமணிய ஐயர், B. A., L. T. அவர்கள் கல்வியைப் பற்றியும், சிறுகூடல்பட்டி பள்ளிக்கூட உதவி ஆசிரியர் திரு. சுப்பையாஐயரவர்கள் தமிழ்த் தொண்டு என்பதைப் பற்றியும், வலையபட்டி அலர்மேலுமங்கைப் பெண் கல்லூரித் தலைமை ஆசிரியர் திரு. இராமநாதம் பிள்ளையவர்கள் மங்கையர்க்கரசியார் சரிதையைப் பற்றியும், மகிபாலன்பட்டி பள்ளிக்கூட தலைமை ஆசிரியர் திரு. துரைசாமி ஐயரவர்கள் ஆரம்பக் கல்வியைப் பற்றியும் சொற்பொழிவுகள் நிகழ்த்தினார்கள். பின்னர் பள்ளிக் கூடத்தின் சார்பாகத் தலைவர் மணவ மாணவிகளுக்குப் பரிசுகள் வழங்கினார். முடிவுரையில் சொற்பொழிவுகளிலுள்ள அரிய நுட்பங்களைவிளக்கி உயர்ந்த மேற்கோள்களை எடுத்துப் புகட்டி ஆரம்பக் கல்வி போதிக்கும் முறைகளை விரித்துரைத்தனர். பின் வித்யாசாலையின் அதிபர் திரு. சி. உ. ராம. இராமசாமிச்செட்டியாரவர்கள் தலைவரவர்களுக்கும் மற்றோர்க்கும் வந்தனோபசாரங் கூறி மலர் மாலை சூட்டினார். மாலை 9-30 மணிக்குச் சபை இனிது நிறைவேறியது என்று பழ. பெரிய. பழனியப்பர் தெரிவிக்கிறார்.

## லண்டன் மகாநாட்டு வேலை

### இந்தியா அரசாங்க முயற்சி

காங்கிரஸ் காரியக்கமிட்டித் தீர்மானத்தையொட்டிக் காந்தியடிகள்லண்டனுக்குப்போவதைப்பற்றி விளக்கமாகச் சொல்லிவிட்டார். சீர்திருத்த ஆபீசும் சென்ற மாதம் தயாரித்த மகாநாட்டு வேலையைப்பற்றிய அறிக்கையை இப்போது பூரணமாக்கி வெளியிட்டிருக்கிறது. அதில் இந்தியா அரசாங்கத்தார் செய்த வேலைகளின் விபரம் அடங்கியிருக்கிறது. சமஷ்டிக்கமிட்டிக்கும் சர்வகட்சி மகாநாட்டுக்கும் புதிதாகச் சேர்த்த அங்கத்தினர்களின் பெயர் இன்னின்னவென இன்னும் வெளியிடப்படவில்லை. இதைப்பற்றிப் பலர் பலவிதமாகச் சொல்லி வருகின்றனர். கொல்லங்கோடுராஜா இராஜப்பிரதிநிதியைப் பேட்டி கண்டு பேசினார். அவர் சர்வகட்சி மகாநாட்டில் நிலச்சுவான்தார்களுக்குப் பிரதிநிதித்துவம் கொடுப்பதைப்பற்றிப் பேசியதாகத் தெரிகிறது. முன்னம் அறிவித்ததுபோல் 8 பேர்களல்லாமல் 12 பேர்கள் புதிய அங்கத்தினர்களாக நியமிக்கப்படுவார்கள் என இப்போது தெரிகிறது.

சமஷ்டி முறையை ஜெய்ப்பூர் மஹாராஜா, ஜோதிபுரி மஹாராஜா, கோலாப்பூர் மஹாராஜா, டோல்பூர் மஹாராஜா, பிகானீர் மஹாராஜா முதலியவர்களும் மேற்கிந்திய சமஸ்தானாதிபதிகளும் தென்னிந்திய சமஸ்தானாதிபதிகளும் ஆதரிக்கிறார்கள். இருந்தாலும் சமஷ்டி முறையை ஆதரிப்பதிலிருந்து சில சமஸ்தானாதிபதிகளை விலக்கிவிட விசேஷ முயற்சி செய்யப்படுவதாகத் தெரிகிறது.

சென்ற மகாநாட்டுக்கு ஆலோசனை கூறுபவர்களாகச் சென்ற ஸர் மால்கம் ஹெயிலி, ஸர் சார்லஸ் இன்ஸ் ஆகியவர்களும் மற்றும் நான்கைந்து உத்தியோகஸ்தர்களும் அவர்கள் மகாநாட்டில் "பறையர்களை"ப் போல் நடத்தப்பட்டதாகப் புகார் வந்ததால் மீண்டும் அனுப்பப்படமாட்டார்கள் எனத் தெரிகிறது.

சர்வகட்சி மகாநாட்டில் குறிப்பிட்ட விஷயங்களைப்பற்றி ஆராய்ந்து பார்த்து இந்தியா அரசாங்கத்தார் தாங்கள் செய்த வேலையைப் பற்றி வெளியிட்டுள்ள அறிக்கையின் சாராமாவது:—

வடமேற்கு எல்லைப்புற மாகாண விஷயமாக உத்தியோகஸ்தர்களும் உத்தியோகப் பற்றற்றவர்களுமடங்கிய கலப்புக் கமிட்டியொன்று எந்தெந்த இலாகா நிர்வாகத்தை எப்படி நடத்துவதென்பதைப்பற்றியும், இதனால் மத்திய அரசாங்கத்துக்கும் மாகாண அரசாங்கத்துக்கும் நேரிடக் கூடிய செலவென்னவென்பதைப் பற்றியும் விசாரித்து வருகிறது. ஜூன் மாத மத்தியில் இக்கமிட்டியின் அறிக்கை தயாராகி விடும். சிந்துப் பிரதேச விஷயமாக அரசாங்கத்தார் சீக்கிரத்தில் ஒரு கமிட்டி நியமித்து சிந்துவைத் தனி மாகாணமாகப் பிரிப்பதால் நேரிடக்கூடிய பண சம்பந்தமான பொறுப்புகள் இன்னின்னவென்பதைப்பற்றி மட்டும் ஆராயும்படி செய்வார்கள் எனத் தெரிகிறது. இந்தக் கமிட்டியார் சிந்துவைத் தனியாகப் பிரிப்பது நன்மையா அல்லவா என்ற விஷயத்தைப் பற்றிக் கவனிக்கமாட்டார்கள். பிரித்தால் வரவுசெலவு விஷயம் எப்படி யிருக்குமென்பதையே கணக்கிட்டுச் சொல்வார்கள். வரவுக்கு மிஞ்சிச் செலவாவதென்றால் அதனை ஈடுசெய்வதெப்படி என்ற விஷயமாகவும் இக்கமிட்டியார் அபிப்பிராயம் சொல்லமாட்டார்கள். ஒரிஸா பிரிவினை விஷயமாகவும் பரிசீலனை செய்ய சீக்கிரத்தில் ஒரு கமிட்டி நியமிக்க அரசாங்கம் முடிவு செய்திருக்கிறது. இக்கமிட்டிக்கு இடவேண்டிய வேலையைப்பற்றி இந்தியா அரசாங்கம் மாகாண அரசாங்கத்தோடு கடிதப்போக்குவரத்து நடத்தி வருகிறது. சீக்கிரத்தில் வேலை துவக்கப்படும்.

வாக்குரிமைக் கமிட்டி விஷயத்தில் தான் துரிதமாக வேலையை ஆரம்பிக்கத் தடைகள் இருக்கின்றன. அக்கமிட்டி இராஜீய விஷயங்கள் பலவற்றைக் கவனிக்க வேண்டிவரும். சமஷ்டிமுறையில் அமைக்கப்படும் சபையின் விவரமும் மாகாண சபைகளின் அமைப்பு விவரமும் சரிவரத்தெரிந்தால்தான் இந்த வேலையைத் துரிதமாக நடத்தமுடியும். வாக்குத்தொகுதிபிரிக்கும் வேலையையும் இவர்கள்தான் கவனிக்கவேண்டும். ஆகவே வகுப்புப் பிரச்னை ஒரு வழியாகத் தீர்த்துவைக்கப்படுமுன் வாக்குரிமையளிப்பதைப்பற்றி விசாரணை நடத்த ஒரு கமிட்டி நியமிப்பதில் பயனில்லையென இந்தியா மந்திரி அபிப்பிராயப்பட்டிருக்கின்றார். இதனால் செப்டம்பர் அக்டோபர் மாதத்துக்குப் பிறகுதான் அக்கமிட்டி நியமிக்கப்படவேண்டியிருக்கிறது. பிரிட்டிஷ் அரசாங்கத்தார் இந்த விசாரணையை ஆரம்பித்து விட்டால் இதுமுடிய குறைந்தது 6-மாதமாகும்.

இந்திய சாண்ட்ஹர்ஸ்ட் கமிட்டி, வேலை செய்து வருகிறது. டிபன்ஸ் சப்கமிட்டி அறிக்கையில் அடங்கிய விஷயங்களும் பரிசீலனை செய்யப்பட்டு வருகின்றன. மற்ற நிருவாக சம்பந்தமான விஷயங்களை எல்லா இலாக்காக்களும் கவனித்து வருகின்றன. அந்த வேலை யெல்லாம் இம்மாதக் கடைசிக்குள் முடிந்து விடும். பண சம்பந்தமாகவுள்ள விவரம் தயாரிக்கப் பட்டு வருகிறது. அடுத்த சர்வகட்சி மகாநாடு கூடுகையில் அது வேண்டினால் இந்த விவரங்கள் கொடுக்கப்படும்.

[ச. மி.]

## மணித்திரள்

லண்டன் நகரில் 1013 தபாலாபீசுகள் இருக்கின்றன.

* * *

உலகில் அதிக ஜனத்தொகையுள்ள நகரம் இப்போது நியூயார்க் (அமெரிக்கா). 60 லட்சம் ஜனங்களுக்கு மேலாக அங்கு வாசிக்கிறார்கள். மேலும் ஆண்டு தோறும் 50,000 வீதம் தொகையதிகமாகி வருகிறது.

* * *

ஒரு சிகரெட் உபயோகிப்பதால் ஆயுள் காலம் 20 நிமிஷம் குறைந்து போகிறதென்றும் சிறுவயதில் சிகரெட் வழக்கம் தொடங்குகிறவர்கள் குறைந்தது இரண்டரை லட்சம் சிகரெட்டுகள் உபயோகிப்பார்களென்றும் ஒரு டாக்டர் கூறுகிறாராம்.

* * *

இதுவரை செல்லாத அளவு அதிக ஆழத்தில் கடலுக்குள் புதுவகை மீன்கள் அகப்பட்டிருக்கின்றன. இவற்றிற்குக் கண்களில்லை. ஆனால் தலையிலும் இருபக்கமும் வெளிச்சங்கள் வீசுகின்றனவாம். மீன் இறந்தால் வெளிச்சமும் போம்.

* * *

அமெரிக்காவிலுள்ள எல்லோஸ்டோன் பார்க் என்ற இடத்தில் ஒரு வெந்நீரூற்று இருக்கிறது. சிறு ஆடைத்துண்டுகளை அந்தக் கொதிக்கும் நீரில் போட்டுவிட்டால் அவை உடனே மறைந்து மீண்டும் மூன்று நிமிஷங்களில் நன்றாக வெளுப்புடன் மேலே வந்து விடுமாம்.

* * *

1924-ல் இருந்ததிலிருந்து 1930-ம்ஆண்டு ராணுவச் செலவை பிரிட்டிஷ அரசாங்கத்தார் 100-க்கு 10-வீதமும் ஜப்பான் தேசத்தார் 1·6 வீதமும் குறைத்திருக்கிறார்கள். அதேகாலத்தில் பிரான்சு 110 வீதமும் இடலி 36 வீதமும் அமெரிகா 28 வீதமும் ராணுவச் செலவை யதிகரித்துக்கொண்டன.

* * *

சிறிய ரேடியோ அலைகள், காப்பியைப் போல் உடலுக்கு உணர்ச்சியையும் சுறுசுறுப்பையும் கொடுக்குமென்று அவைகளில் வேலை செய்யும் நிபுணர்கள் கூறுகிறார்கள். அலைகள் அழுத்தமா யிருந்தால் முதலில் பாதங்களும், கால்களும் உஷ்ணமடைகின்றன. அப்பொழுது புதிய உத்சாகமும், உணர்ச்சியும், சுறுசுறுப்பும் ஏற்படுகின்றன. ஆனால் முடிவில் சோர்வு தோன்றுகின்றது. ஆனந்த நிலை முடிவு பெற்றுச்சோர்வுற்றநிலையும் நன்றாகத் தெரிவதால் மின்சாரத்தினால் ஏற்படு மிதைத் தடைசெய்து வைக்கிறார்கள்.

* * *

வட சமுத்திரப் பிரதேசங்களிலும், சில குளிர்ந்த பிரதேசங்களிலும் உஷ்ணப்பிரதேசங்களில் காணப்படும் மரம், செடி, கொடி முதலியவைகள் இப்பொழுது அங்கே ஆராய்ச்சியாளர்களுக்குப் பூமியினின்றும் அகப்படுகின்றனவாம். ஆகையால் அவர்கள் அந்நாடு ஒரு சமயம் உஷ்ணப் பிரதேசமாயிருந்திருக்கவேண்டுமென ஊகிக்கின்றனர். தென் துருவப் பிரதேசத்தில் சமீபத்தில் உஷ்ணப் பிரதேச மரங்களின் கிளைகள் அகப்பட்டனவாம். பனிப் பிரதேசமாகிய அது ஒரு சமயம் உஷ்ணப் பிரதேசமாயிருந்திருக்க வேண்டும்.

* * *

கானல்நீர் என்ற மொழி மிகப் பழைய காலத்திலிருந்து ஜனங்களுக்குத் தெரியுமாயினும் யுத்தகாலத்தில் அதன் உபயோகம் அதிகமாக வெளிப்பட்டது. வாயுவினிடம் உஷ்ணமேறுவதால் எதிரில் உள்ள பொருள்களை இடமாற்றிக் காட்டுவதும் மறைப்பதும் அதன் பயன்களாகும். மகாயுத்தத்தில் ஒரு சமயம் துருக்கிப்படைகள், எதிரியின் படைகள் அதிகமாகத் தோன்றியதால், ஓடிவிட்டனவாம். வேறொரு சமயம் எதிர்த்து வரும் படைகண்ணுக்குத் தெரியாமலிருந்தபடியால் சிலதுருக்கிவீரர்கள் ஓடாமல் நின்று எதிரிவசம் கைதிகளாயினராம். மெஸபொடேமியா பாலைவன யுத்த ஸ்தலத்தில் நடைபெற்றவை இவை.



## கம்பரில் திருவள்ளுவர்

### பொருட்சுவை விளக்கம்

கல்வியிற் பெரியாராய கம்பர் பெருமான் திருவள்ளுவரது திருக்குறளின் அருஞ்சொல்லையும் பொருளையும் ஆண்டாண்டமைத்து அழகினுக்கு அழகு செய்யும் திறன் ஆராய்தற்குரியதாம். அணுவைத் துளைத்து ஏழு கடலைப் புகட்டிக் குறுகத் தரித்த குறளாய்த்திகழும் அழகிய சொற்களுக்குச் சிறந்த வுரை விரித்துரைக்கும் பான்மையும் அருந்தமிழ்க் கலைகள் ஐயந்திரிபற ஓதி யுணர்ந்த கம்பரிடம் விளங்காநிற்கும்.

காதலர் இருவர் ஒருவரை யொருவர் சந்தித்து அன்பு மிக்கூர்ந்து உள்ளத் தெழும் உயரிய காதலை,

> "கண்ணொடு கண்ணினை நோக்நொக்கின்
> வாய்ச் சொற்கள் என்ன பயனு மில"

என்று செந்நாப் போதார் அறதியிட்டுரைத்தார். காதலர் இருவர் ஊழ்வினைப் பயனால் ஒருவரை யொருவர் எதிர்ப் பட்டுக் கண்ணோக்கும் ஒக்குமாயின் வாயுரை வேண்டற்பாலதன்று என்பது தேவ தேவன் கருத்தாகும். இதைக் கம்பர் பெருமான் எடுத்தாளும் அழகு அறிஞர் மனதைக் கவர்வதாகும். மிதிலை மாநகரிலுள்ள தமது மாளிகை மேல் சிதை உலவு ஞான்று வீதி வாய்ச் சென்ற ஸ்ரீராமனைக் காண்டலும் தலைவியும் தலைவனும்காதலுற்றநிலையை எழுதப்போந்த கம்பர் வள்ளுவர் கருத்தை விளக்கும் திறனே திறன்.

> "எண்ணரும் நலத்தினால்
> இனைய நின்றுழி
> கண்ணொடு கண்ணினைக்
> கவ்வி ஒன்றை யொன்று
> உண்ணவும் நிலை பெரு
> துணர்வும் ஒன்றிட
> அண்ணலும் நோக்கினான்
> அவளும் நோக்கினாள்"

என்று கம்பர் இருவர் கண்ணோட்டத்தினால் புகுந்தகாதலை அழகொழுகப் புகல்கிறார். காதலரில் ஒருவர் கண்டு மற்றொருவர் கண்ணைக் கவரவும், இருவர் உணர்ச்சியும் ஒன்றிடவும் சீதையும் இராமனும் நோக்கினார்களாம். ஈண்டுக் கம்பர், நாயனார் குறளை எடுத்துக் கவிமாடம் அமைக்கும் திறன் அறிஞர்க்கு ஆராவின்பம் அளிப்பதாகும்.

மாந்தர்க்கு இம்மை மறுமையிரண்டற்கும் துணை செய்யத்தக்க ஒப்புயர்வில்லாத திப்பிய அறமாமென்பது, எப்புலவர்க்கும் ஒப்ப முடிந்ததாகிய செய் நன்றியறிதலைக் கூறப் போந்த வள்ளுவனார்,

> "எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்
> உய்வில்லை செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என வியந்துரைத்தார். இக்குறளுக்குக் கம்பர் கையாடும் அழகு சால அழகுடைத்தாம். 'எந்நன்றி கொன்றார்க்கு' என்னும் பதத்திற்குப் பகரும் பெரிய வுரை உன்னுதற்பாலது. மாதர் ஹத்தி முதலிய செய்தார்க்குப் பிராயச்சித்த முண்டாயினும், செய்ந்நன்றி கொன்றவர்க்கு எவ்வாற்றானும் கழுவாயில்லையென்பதையும், அவரே மீளா நரகிற்கு ஆளாகுவர் என்பதையும் கம்பர்,

> "சிதை வசல் காதல் தாயை
> தந்தையை குருவை தெய்வப்
> பதவி அந்தணரை ஆவைப்
> பாலரைப் பாவைமாரை
> வதை புரிகுநர்க்கும் உண்டாம்
> மாற்றலாம் ஆற்றல் மாயா
> உதவி கொன்றார்க்கு என் றேனும்
> ஒழிக்கலாம் உபாயமுண்டோ"

என்று விருத்துரைக்கும் விரிவுரை சாலவும் அழகிய தாகும்.

> "அகத்தின் அழகு முகத்தில் தெரியும்"

எனும் உண்மைய ஆசிரியர் வள்ளுவனார்,

> "அடுத்தது காட்டும் பளிங்குபோல் நெஞ்சம்
> கடுத்தது காட்டும் முகம்"

என்றருளிப் போந்தார். அதாவது ஒருவன் தான் நெஞ்சினுட் கொண்ட தன்மையை அவன் முகம் பளிங்கு போல் காண்பிக்கும் என்பதே நாயனார் கொண்ட உட்கிடக்கை. விபீஷ்ணன் அரக்கர் கோனாகிய இராவணனுக்குப் பல்லாற்றானும் புத்தி புகட்டியும் கேளாதுகண்டு அயோத்தி அண்ணல்பால் அடைக்கலம் புகவந்தான். அன்ன காலை இராமன் இவரைச் சேர்த்துக் கொள்ளுவது தகுமோ தகாதோ என்று அநுமனை வினவிய பொழுது, அநுமன்,

> "வண்டுறை வங்கலாய்
> வஞ்சர் வாண்முகம்
> கண்டதோர் பொழுதினில்
> தெரியும் கைதவம்
> உண்டெனில் அஃதவர்க்
> கொளிக்க ஒண்ணுமோ
> விண்டவர் பல பகல்
> மறுகி வீழ்வரோ"

> "உள்ளத்தி னுள்ளதை உரையின் முந்துற
> மெள்ளத்தம் முகங்களே விளம்பு மாதலால்
> கள்ளத்தின் விளைவெலாம் கருத்திலா இருள்
> பள்ளத்தி னன்றியே வெளியிற் பல்குமோ"

எனக் கூறிப் போந்தான். இதனால் வஞ்சகர் உளத்தை அவர் முகமே சுட்டிவிடும் எனும் வள்ளுவர் வாக்கைக் கம்பர் விளங்கவுரைத்தார்.

இன்னணம் கம்பர், நாயனார் தமிழ் மறையினை எடுத்தமைக்கும் அழகு பேரின்பம் தருவதாகும். ஒருவன் எரியன்ன துன்பத்தை இயற்றிடினும் அதனைப்பொறுத்துச் சினங் கொளாதிருத்தல் நன்று என்னும் விழுமிய கருத்தமைத்து,

> "இணரெரி தோய்வன்ன இன்னா செயினும்
> புணரின் வெகுளாமை நன்று"

என்று வள்ளுவனார் மறை கூறுகின்றது. இவ்வடிகளைக் கம்பர் காவியத்தில் நுழைக்கும் நயம் பெரிதும் பாராட்டற்பாலதாகும்.

> "தீர்வரும் இன்னல் தம்மைச்
> செய்யினும் செய்ய சிந்தைப்
> பேரறிவாளர் தத்தம் செய்கையிற்
> பிழைப்பதுண்டோ
> கார்வரை நிறுவித் தன்னைக்
> கனலெழக் கலக்கக் கண்டும்
> ஆர்கலி அமரர் உய்ய அமுது
> பண்டளித்த தன்றே"

என்று கம்பரது காவியத்தில் பரக்கக் காணலாம். பண்டொரு கால் மந்திர மலையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கி விண்ணவரும் தானவரும் பேராழியைக் கடைந்தபொழுது எழுந்த தேவாம்ருதம் போன்று, தீமை செய்தார்க்கு நன்மையே புரிதல் வேண்டுமெனும் உண்மையைக் கம்பர் காவியத்தில் உணர்த்தியுள்ளார். இன்னா செய்தார்க்கு இனியவே செய்தல் வேண்டுமென்றோ?

S. M. பக்தவத்சலன்.

## சர்வதேச தொழிற்சங்க மகாநாடு

### இந்தியர்களின் வெளியேற்றம்

இந்திய அரசாங்கத்தார் இந்திய வர்த்தகர்களின் வேண்டுகளைப் புறக்கணித்துச்சென்ற சில ஆண்டுகளாகச் சர்வதேச மகாநாடுகளுக்குப் பிரதிநிதிகளாகச் செல்வோருடன் ஒரு ஐரோப்பியரை ஆலோசனை கூறுபவராக அனுப்பி வருகின்றனர். இம்முறை இந்தியாவின் கௌரவத்தையே பாதிக்கிறதென்றும், பலமுறைகளில் ஐரோப்பிய ஆலோசனை கூறுபவருக்கும் இந்தியப் பிரதிநிதிகளுக்கும் சில தீர்மானங்களில் அபிப்பிராய பேத மேற்படுகிறதென்றும் ஆகையால் இவ்வாறு பிரதிநிதிக்கூட்டத்தை அனுப்பக்கூடாதென்று இவ்வாண்டும் இந்தியர் வர்த்தகர் கழகம் கண்டித்த தீர்மானம் நிறைவேற்றியிருப்பதுடன் அவ்வாறு மீண்டும் அரசாங்கம் ஐரோப்பியரை நியமித்தால் இந்திய வர்த்தகர் பிரதிநிதிகள் வெளியேற வேண்டுமெனவும் தீர்மானித்தது. இவ்வாறு சர்வதேச மகாநாடுகளினின்றும் கலவாது வெளியேறுவது சென்ற மூன்றாண்டுகளாக நிலவி வருகின்றது.

இவ்வாண்டு வர்த்தகர் பிரதிநிதியாக ஸ்ரீ வால்சந்த் ஹீராசந்தும் அவருக்கு ஆலோசனை கூறுபவராக ஸ்ரீகோஷும், ஸ்ரீ பிரசாத் பாக்லாவும் நியமிக்கப்பட்டனர். இவர்களுடன் கூட ஐரோப்பிய வர்த்தகர்களின் பாதுகாப்புக்காக இந்திய வர்த்தகர் பிரதிநிதிக்கு ஆலோசனை கூறுபவராகத் திரு. டார்ல்டன் துரை மகனார் நியமிக்கப்பட்டார். திரு. வால் சந்த் ஹீராசந்த் திரு. டார்ல்டன் அவர் இந்தியரல்லராகையால் அவரை மகாநாட்டிற்கு அனுமதிக்கக்கூடாதென சர்வதேச மகாசபையை வேண்டினார். ஆனால் அவர்கள் அவரை இந்திய அரசாங்கம் நியமித்திருப்பதால் அனுமதித்தனர். இக்கூற்று இந்திய ஹைகமிஷனர் திரு.அதுல் பானர்ஜியால் ஆதரிக்கப்பட்டு மகாசபையினராலேயே ஏற்றுக் கொள்ளப்பட்டது.

தேசியப்பிரதிநிதித்வம் இல்லாமையாலும், திரு. ஹல் சந்த் ஹீராசந்த் நிலையைத் திரு. டார்ல்டன், பேச அனுமதிக்கப் பட்டபொழுது, தாக்கி சிக்கலுண்டாக்கியதாலும், இந்தியப் பிரதிநிதிகள், சர்வதேச சபையின் செய்கையைக் கண்டிப்பதற் கறிகுறியாக வெளியேறினர். அவர்கள் சபையின் கௌரவத்தைக் குறைக்கவிரும்பவில்லையென அவர்கள் பின்னர் விடுத்திருக்கும் செய்தியினின்று அறியக் கிடக்கின்றது.

## குடிசைத் தொழிலை விருத்தி செய்யுங்கள்

### காந்தியடிகளின் வேண்டுகோள்

சென்ற வெள்ளிக்கிழமை காந்தியடிகள் ஸ்ரீ. அப்துர்காபூர் கானுடனும், திரு. வல்லபாய் பட்டேலுடனும் பரோடா சமஸ்தானத்திலுள்ள மரோலி என்ற கிராமத்திற்கு விஜயம் செய்தார். அன்று அங்கு ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினார். அதன் சாராமாவது:—

அன்பர்களே, பத்தாண்டுகளுக்கு முன்னர், இப்பொழுது உங்களுக்காகத் தொண்டு செய்யும் ஸ்ரீமதி. மிதுபென் பெடிட் அல்லும்பகலும், வெய்யிலென்றும் மழையென்றும் பாராது, வெறுங்கால்களுடன் கிராம ஜனங்களிடையே புகுந்து அவர்களுக்குக் கல்வியும், நெய்தலும் போதிப்பாரென எவரேனும் சொல்லியிருந்தால் நான்கொஞ்சமும் நம்பியிருக்கமாட்டேன். அவர் ஒரு பெரும் செல்வக்குடும்பத்தில் அவதரித்தவர். கதரியக்கம் எங்கணும் பரவாவிடின் மதுவிலக்கு பயன் தராதென்பது என் அபிப்பிராயம். கள்ளுக்கடைகள் இல்லாவிட்டால். இப்பொழுதிருப்பது போல் குடிசைக்காரர்கள் திருட்டுத்தனமாகக் கள்ளை உற்பத்தி செய்து குடிப்பார்கள். அவர்களுக்கேதாவது ஒரு தொழிலை நாம் கற்பியாவிடின் அவர்கள் குடியை நிறுத்தார். பெரும் தொழிற்சாலைகளிலே வேலை செய்யும் தொழிலாளர்கள் தங்கள் களையைப்போக்குவதற்கு ஏதாவதொரு குடியை வேண்டுகின்றனர். மதுவை முகர்ந்து பாராத நான் தென் ஆப்பிரிக்காவிலே யாவரும் குடிப்பதற்குப்பிரியத்துடன் கள்ளைக் கொடுத்தேன். என்னுடனிருந்த கூலிகள் அதை வேண்டினர். அவர்களுக்காக ஒரு கடையினின்றும் வாங்கிக்கொண்டு வந்து கொடுத்தேன். மிருகத்தைப்போன்று ஓழியாமல் வேலைசெய்யும் மனிதர்கள்கள்ளை வேண்டுகின்றனர். ஆனால் தங்கள் வீட்டிலேயே இருந்து கொண்டு அமைதியுடன் தொழில் செய்பவர்கள் சுலபமாகக் குடியை விட்டு விடலாம்.

நீங்கள் யாவரும் நெய்தல், நூற்றல் முதலிய குடிசைத் தொழில்களைக் கைக் கொண்டால் செல்வந்தராவீர்கள். நீங்கள் இலட்சாதிபதியாக ஆகவேண்டவில்லை. உங்களின் கடனை மாத்திரம் தீர்க்க விரும்புகின்றீர்கள். இத்தனை நாள் மார்வாடியினின்றும் கடன் வாங்கியதற்குப் பதிலாக அப்பொழுது அவனிடம் பணத்தைச் சேமித்து வைக்கலாம். அப்பொழுது சொந்தவீடுகளிருக்கும்; ஏராளமாக ஆடு, மாடுகளிருக்கும். அவ்வாறு நம் நாடு முழுதும் உடனே சீர்ப்படவேண்டும். இதுதான் சுயராஜயத்தின் ஆக்க வேலை. ஆகவே இதில் முற்றும் தீவிரமாய் இறங்கி வேலைசெய்ய வேண்டுமாய் உங்களைவேண்டுகின்றேன்.

## பார்தோலியில் எல்லைப்புற காந்தி

எல்லைப்புற காந்தி திரு. அப்துல் காபூர் கான் டாக்டர் அன்சாரி அழைப்புக்கிணங்கி போபல் மகாநாடு சென்று விட்டு பார்தோலிக்கு காந்தியடிகளைக் காணவந்திருந்தபோது ஸ்ரீமதிகஸ்தூரிபாய்தலைமையில் ஒருபொதுக் கூட்டத்தில் பேசுங்கால் தாம் பார்தோலி குடியானவர்களிட மிருந்து ஒரு பாடங்கற்றுக் கொள்ள வந்திருப்பதாகவும், அறப்போரின் முறை சுமார் 14 நூற்றாண்டுகளுக்கு முன்னரேயே கையாளப் பட்ட முறையென்றும், காந்தியடிகள் அதை இப்பொழுது நமக்கு உபதேசித்து வருகிறாரென்றும் காங்கரஸ் மகாசபை நாட்டிற்குப் பாடுபடுவதனால் அதில் முஸ்லீம்கள் யாவரும் சேர்ந்து கொள்ள வேண்டு மென்றும், ஆங்கிலேயர் இந்தியரிடையே ஆப்கன் பூச்சாண்டியையும் ஆப்கானியரிடையே ஹிந்து சாம்ராஜ்ய பூச்சாண்டியையுங் காட்டி வருவதாகவும், இனிமேல் ஆப்கானியர், தங்கள் பெரிய சகோதரராகிய ஹிந்துக்களிடமாவது அடிமைப் படலாம் ஆனால் அந்நியரிடம் அடிமையாகக் கூடா தென்றும், மூத்தவர் இளையவரைக் காப்பதுபோன்று ஹிந்துக்கள் முஸ்லிம்களைக்காத்துஇருவரும்ஒருங்கே சேர்ந்து தங்கள் இலட்சியத்தை அடையவேண்டுமென்றும், நாடு இருவருக்கும் சொந்தமாகையால் ஒருவரும் வெளி நாட்டிற்குச் செல்ல வேண்டிய அவசிய மில்லை யென்றும் சொன்னார்.

## தமிழ்நாட்டுக் காங்கரஸ்

### காரியக் கூட்டம்

தலைவர்:— ஸ்ரீமான் ச. ராஜ கோபாலாச்சாரியார்.

உபதலைவர்:— ஸ்ரீமான் எஸ். சத்திய மூர்த்தி.

காரியதரிசிகள்:— ஸ்ரீமான்கள் டி. எஸ். எஸ். ராஜன், எம். பக்தவத்சல முதலியார்.

பொக்கிஷதாரர்:—ஸ்ரீமான் ஸ்ரீ. க. ம. ரா. சுப்புராமன்.

காரியக்கமிட்டி அங்கத்தினர்கள்:— ஸ்ரீமதி ருக்மணி இலட்சுமிபதி அம்மையார், டாக்டர். பி. எஸ். ஸ்ரீநிவாசன், ஸ்ரீமான்கள் அண்ணாமலைப் பிள்ளை, தெய்வ நாயக அய்யா, சீயாழி. சாமிநாத செட்டியார், அ. வேத ரத்னம் பிள்ளை, டாக்டர். டி. வீ. சாமிநாத சாஸ்திரி, மட்டப்பாரை வேங்கட ராமையர், ஜனாப் ஹாஜி மௌலானா சாகிப், காமராஜ் நாடார். ஆர். வீ. சாமிநாதன், ரோட்ரியக்ஸ், பவானிசிங், ஜி. வேலப்ப நாயுடு.

அகில இந்திய காங்கரஸ் கமிட்டி உறுப்பினர்:— ஸ்ரீமதி ருக்மணிஇலட்சுமிபதிஅம்மையார். ஸ்ரீமான்கள் ச. இராஜகோபாலாச்சாரியார், எஸ். சத்தியமூர்த்தி, ஸ்ரீமதி லட்சுமி அம்மாள், ஸ்ரீ. க. ம. ரா. சுப்புராமன், ஸ்ரீ. சி. க. முத்துரங்க முதலியார், ஸ்ரீமதி பத்மாவதி ஆஷர்சேட், ஸ்ரீ அ. வேதரத்னம் பிள்ளை, டாக்டர். சாமிநாத சாஸ்திரி, ஸ்ரீமான்கள் க. சந்தானம், குமாரசாமி ராஜா, பக்தவத்சல முதலியார், பவானிசிங், என். எஸ். வரதாச்சாரியார், க. அண்ணாமலைப்பிள்ளை, சி.பி. சுப்பைய்யா முதலியார், பி. டி. ஆஷர்சேட், ஜே. பி. ரோட் ரீயக்ஸ், வேங்கடாசல செட்டியார், திருவன். ஈ. கிருஷ்ணய்யர், ஜனாப். ஹாஜி மௌலானா சாகிப், ஜனாப் உபயதுல்லா சாகிப், ஜனாப். பி. உஸ்மான் சாகிப், ஜனாப். அப்துல் சதார் சாகிப்.

(ஒரு ஸ்தானம் ஆதிதிராவிட சகோதரருக்கென் ஒதுக்கப்பட்டு அதன் தேர்தல்நிறுத்தி வைக்கப்பட்டிருக்கின்றது.)

பிராதாப்கார் ஜில்லா அரசியல் மகாநாட்டிற்குச் சென்ற கலாகங்கர் ராஜாவின் சகோதரர் ஸ்ரீ குன்வார் பிரஜிசிங் மகாநாட்டுப் பந்தல் வாயிலிலே கைது செய்யப் பட்டார்.

ㅇ ㅇ ㅇ

சண்டா முனிசிபல் தலைவராக அகில இந்திய காங்கரஸ் கமிட்டியின் உறுப்பினரும் ஜில்லாத் தலைவருமான ஸ்ரீ. சேத் குஷால் சந்த் மறுமுறையும் ஏகமனதாகத் தெரிந்தெடுக்கப்பட்டார்.

ㅇ ㅇ ㅇ

கபூல் நகரின் தபால் தந்தி இலாகாவின் டைரக்டர் ஜனாப் முகம்மது ஆலம் என்பார் 3581 ரூபாய் களவாடியதின் நிமித்தம் தன் வேலையை இழந்ததுடன் ஆறு மாதம் சிறை தண்டனையும் விதிக்கப்பட்டிருக்கின்றார்.

ㅇ ㅇ ㅇ

பிரான்பூர் நகரின்கண் வெடி மருந்து தொழிற்சாலை நடத்தி வரும் தௌலத்ராம் வித்யா பிரகாச் சம்பெனியாரிடமிருந்து 2,558 குண்டுகள் களவாடப்பட்டனவாம். கம்பெனியின் நிர்வாகி சந்தேகத்தின் பேரில் கைது செய்யப் பட்டிருக்கிறார்.

ㅇ ㅇ ㅇ

ஜப்பான் அரசாங்கத்தினர் சர்வதேச வெள்ளிமகாநாடு கூட்டுவிக்கும் யோசனையை இப்பொழுது நழுவ விட்டுவிட்டனர். ஒரு சமயம் மகாநாடு முறிந்துபோனால் நிலைமை இப்பொழு திருப்பதைவிடக் கேவலமாய்ப் போய்விடுமென பயந்தது இதற்குக் காரணமாம்.

ㅇ ㅇ ㅇ

வங்க அரசாங்கம் டாக்டர். பி. என். டி.யின் ஜலாதாரத் திட்டத்தை நிறைவேற்ற அனுமதித் திருக்கின்றது. அவர் கல்கத்தா நகர சபைக்காக இத்திட்டத்தை மிகவும் விளக்கமாகப் படங்களுடன் வரைகின்றார். இத்திட்டத்திற்கு 65 இலட்சம் ரூபா செலவாகும்.

ㅇ ㅇ ㅇ

தாராவடி கலவர வழக்கில் தனியாக விசாரித்த கோர்ட்டார் எதிரிகளில் பன்னிருவருக்கு மரண தண்டனையும், 26 பேருக்கு வாழ்நாள் முழுவதும் சிறைவாச தண்டனையும் விதித்தனர். ஐவரை மன்னித்து விட்டனர். மற்றவர்கள் வழக்கின் ஆரம்பத்திலேயே விடுவிக்கப் பட்டார்கள்.

ㅇ ㅇ ㅇ

ஜமீன்தார்களுடையவும், நிலச்சுவான் தார்களுடையவும் உரிமையைக் காப்பதற்கும் ஸ்ரீ கான் அப்துல் காபர்கானின் "செவ்வுடை" இயக்கத்தைத் தடுப்பதற்கும்பெஷாவாருக் கருகிலுள்ள டெகான் என்னுமூரைத் தலைமைத் தலமாகக்கொண்டு "பச்சைஉடையினர்" என்ற இயக்கம் ஏற்பட்டிருக்கின்றது.

ㅇ ㅇ ㅇ

சென்ற சில மாதங்களாக பிரிவீ கௌன்சிலில் தொழில் முறையாக ஈடு பட்டிருக்கும் ஜனாப் முகமதலி ஜின்னா விடுமுறையின் போது இந்தியாவுக்கு வருவாராம். அவர் இந்தியாவுக்கு ஆகஸ்டுமாத ஆரம்பத்தில்வந்துவிட்டு ஐக்கிய அமைப்புக் கமிட்டிக்கூட்டகாலத்தில் இங்கிலாந்திற்குச் சென்று விடுவாராம்.

ㅇ ㅇ ㅇ

ஐக்ய மாகாணத்தில் சென்ற வருடம் 71,91,584 ஏகர் நிலங்களும் இவ்வாண்டு 75,17776 ஏகர் நிலங்களும் உழுது பயிரிடப் பட்டன. சென்ற ஆண்டைவிட இவ்வாண்டு விளைவு முக்கால் வீதம் அதிகரித்திருக்கின்றதாம். ஆனால் சென்ற ஆண்டு கோதுமை மணு 4ரூபாயாகவும் இவ்வாண்டு 2½ரூபாயாகவும் விற்கப் படுகின்றதாம்.

ㅇ ㅇ ㅇ

பெஷாவர் முனிசிபல் கழகம் அந்நகரின் கண்ணுள்ள மிருகக் காட்சிச் சாலையை மூடிவிடத் தீர்மானித்திருக்கின்றனர். திரள் திரளாக சிறுவரும், எல்லைப்புற சாதியினரும் ஆப்கானியரும் இதைக் கண்ணுற வருவார்களாம். அதிலுள்ள சிங்கங்கள், புலிகள் முதலிய விலங்குகளை ஓர் இந்திய சமஸ்தானத்திற்கு விற்கப் போகின்றனராம்.

ㅇ ㅇ ㅇ

மோசுல் நாட்டிலிருந்து மத்யதரைக்கடலிற்குச் செல்லும் எண்ணெய் வாரிக் குழாய் இப்பொழுது வேலைசெய்ய ஆரம்பித்திருக்கின்றது. இராக் பெட்ரோல் கம்பெனியாருக்கும், இது சம்பந்தமான அரசாங்கங்களுக்கும் உடன்படிக்கை ஏற்பட்டுவிட்டதாம். கிர்கோ என்றவிடத்தில் குழாய்இருபிரிவாகப்பிரிந்து ஒன்று திரிபோலிக்கும், மற்றொன்று ஹைபாவுக்கும் செல்லுமாம்.

ㅇ ㅇ ㅇ

சோவியத் சைன்னியத்தின் அழைப்பின் மேல் 37 ஜர்மனி தொழிலாளர் பிரதிநிதிகள் மாஸ்கோ சென்று அச்சைன்னியத் தலைவர்களுடன் ருஷிய நாட்டைச் சுற்றி வருகின்றனர். ஜர்மனியப் பிரதிநிதிகள் தங்கள்நாட்டை பலாத்காரமுறையில் சோவியத்நாடாகச்செய்வதாக ருஷிய நாட்டினருக்கு வாக்குறுதி அளித்திருப்பதாக லண்டன் "டைம்ஸ்" பத்திரிகை எழுதுகின்றது.

ㅇ ㅇ ㅇ

கராச்சி துறைமுகக் கழகத்தினர் சென்ற ஆண்டில் அதிகப்படியாகக்கிடைத்தஇலாபத் தொகையாகிய 186,000 ரூபாயைக்கொண்டு மண்ணெண்ணெயின் வரிவிகிதத்தைப்பாதி

## கலம்பகம்

யாகக் குறைத்து விட்டு அதனால் ஏற்படும் குறைவை ஈடு செய்யத் தீர்மானித்திருக்கின்றனர். ஆனால் இவ்வாறு அவர்கள் செய்வதற்கு மண்ணெண்ணெய்க்கம்பெனியாரும் தங்கள் விலையில் பாதியைக் குறைக்கவேண்டுமாம்.

ㅇ ㅇ ㅇ

மத்யமாகாண காங்கரஸ் கமிட்டியார் ஸ்தல ஸ்தாபனங்களைக்கைப்பற்றத்தீர்மானித்திருக்கின்றனர். ஆகவே ஜபல்பூர் நகர் காங்கரஸ் கமிட்டி தனது அபேட்சகர்களை நிறுத்தித் தீவிரமாக அவர்களுக்கு உழைத்து வருகின்றது. தேர்தல் செப்டம்பர் மாதத்தில் நடைபெறும். காங்கரஸ்காரர்களின் உழைப்பு பலமாயிருப்பதால் அவர்கள் வெற்றி பெறுவது திண்ணம். ஆகவே தற்சமய மிருக்கும் உறுப்பினரில் பலர் ஸ்தானம் இழக்க வேண்டி வரும்.

ㅇ ㅇ ㅇ

வாப்து கட்சியினரும், மிதவாதக் கட்சியினரும் செய்சிரா நகரினின்றும் மெனுவியா என்நகருக்குக் கட்சிப்பிரசாரத்திற்காகச் செல்கின்றனர். அதைத்தடுக்க எகிப்து அரசாங்கம் அவர்கள் செல்லும் பாலங்களை முள்வேலிகளால் அடைத்து நாற்புறமும் இராணுவவீரர்களைத் துப்பாக்கி சகிதம் நிறுத்தி யிருக்கின்றதாம். இம்மாதிரியே சென்ற பொதுத்தேர்தல் காலத்தில் எதிர் கட்சியினரின் தேர்தல் பகிஷ்காரத்தைத் தடுத்துவிட்டார்கள்.

ㅇ ㅇ ㅇ

தென் கல்கத்தாவில் ஒரு வீட்டைத் திடீரெனப் போலீசார் சோதனையிட்டனர். அப்பொழுது அங்கே 13 வயதுள்ள சுகதேவா என்ற பெண்ணை அபகரித்துவந்து ஒரு 60 வயதுள்ள மார்வாரிக்கு விற்க சில மனிதர்களும் பெண்களும் ஏற்பாடு செய்திருந்தனராம். விவாகமாகும் தருவாயில் போலீசார் மார்வாரியையும், பெண்ணின் பெற்றோர் போல் நடித்தவர்களையும் மற்றும் சம்பந்தப் பட்டவர்களையும் கைதுசெய்து அச்சிறு பெண்ணை விடுவித்தார்களாம்.

ㅇ ㅇ ㅇ

லாகூரிலே பஞ்சாப் அரசாங்கம் பகத்சிங் இறந்தும் அவரை வேட்டையாடுவதினின்றும் நின்றார்களில்லை. "சர்தார் பகத்சிங்" என்ற புத்தகம் எழுதிய "பவிஷ்யோ", "சந்து" என்ற பத்திரிகைகளின் ஆசிரியரான ஸ்ரீ. திருவேணி பிரசாதும், அதை வெளியிட்ட ஸ்ரீ. ஜே. என். சன்யாலும் இ. பு. கோ. 124 ஏ. பிரிவுப்படி கைதுசெய்திருக்கின்றனர். இப்புத்தகங்களைக் கைப்பற்ற லாகூரிலும், அலகாபாதிலும் மும்முறமாகப் போலீசுக்காரர்கள் சோதனையிடுகின்றனராம்.

ㅇ ㅇ ㅇ

சென்ற வியாழனன்று காலையில் காந்தியடிகள் பம்பாய் தேசசேவிகைகளைச் சந்தித்து எப்பொழுதும் கதருடை தரிப்பவர்களை மறியல் செய்ய வேண்டுமென்றும் மறியல் சமாதான முறையிலிருக்க வேண்டுமென்றும் விதேசிதுணிகளைக் கொளுத்தவேண்டுமென்றும் சுதேசியில் அணிகளை ஏழை எளியவர்கட்கு அளிக்கவேண்டுமென்றும் கதரியக்கம் பட்டினி கிடக்கும் தொழிலாளர்கட்கும் விவசாயிகட்கும் உதவி புரியவே ஏற்பட்டதென்றும் ஆகவே அதை முற்றிலும் ஆதரிக்க வேண்டுமென்றும் கூறினர்.

ㅇ ㅇ ㅇ

ஸ்தல அதிகாரிகள் சென்ற அறப்போரில் டில்லி காங்கரஸ் கமிட்டியின் சொத்தைப் பறிமுதல் செய்து கொண்டனர். காந்தி-இர்வின் உடன் படிக்கை நிகழ்ந்து 3 மாதமாகியும் இன்னும் திருப்பிக் கொடுக்க வில்லை. ஏற்கனவே பத்திரிகைகளில் கொடுக்கப் பட்ட தாகச்சொல்லப்பட்ட சொத்துசத்தியாகிரஹ ஆசிரமத்தைச் சேர்ந்ததாம். ஆகையினால் தங்கள் சொத்தைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று மக்கா காங்கரஸ் கமிட்டியின் காரியதரிசி ஸ்ரீ. பரீதல் அன்சாரி நகர மாஜிஸ்டிரேட் முன்னர் வழக்குத் தொடுத்திருக்கின்றார்.

ㅇ ㅇ ㅇ

இம்பீரியல் ஏர்வேஸ் சர்விஸ் கம்பெனியார் முதல் முதலாக இந்தியாவினின்று பார்சல் ஆகாயத்தபால்முறையை சென்ற வியாழனன்று தொடங்கினர். இது காராச்சியினின்றும் புறப்பட்டு ஜூன் 16-ந் தேதி லண்டனை அடையும். சென்ற மூன்றுமூன்று தடவைகளாக ஆகாயத் தபால் வண்டிகள் போய்க் கொண்டிருப்பினும் அவைகளில் இத்தனை நாட்கள் வரை பிரயாணிகளும், தபால்களும், மூட்டைகளுமே ஏற்றிச் செல்லப் பட்டன. ஏற்கனவே பார்சல்கள் லண்டன் சேர 19 நாட்கள் பிடித்தன. இப்பொழுது 5 நாட்களே போதும்.

ㅇ ㅇ ㅇ

பஞ்சாப் பல்கலைக் கழகமண்டபத்தில் பஞ்சாப் கவர்னரையும் மற்றும்சிலரையும்சுட்டுக் காயப்படுத்தியதாகவும் இன்ஸ்பெக்டர் சன்னன் சிங்கைக்கொன்று வீழ்த்தியதாகவும் குற்றம் சாட்டப்பட்டு மரணதண்டனை விதிக்கப் பட்ட திரு. ஹரிகிஷன் சென்றவாரம் செவ்வாயன்று தூக்கிலிடப்பட்டார். அவரது பிணத்தையாவது, ஹஸ்தியையாவது தங்களிடம் தரும்படி உறவினர்கேட்டதற்குஅரசாங்கத்தினர் மறுத்து விட்டார்கள். தூக்கிலிடப்பட்டபின் பிணத்திற்கு சாஸ்திரப்படி செய்யவேண்டிய சில கருமங்களையும்கூட புரிய உறவினரை அனுமதிக்கவில்லையாம்.

ㅇ ㅇ ㅇ

டில்லிமா நகரின்கண்ணுள்ள பொது சமாசார நூல் நிலையத்தில் தீப்பிடித்து பல நீலப் புத்தகங்களும் அறிக்கைகளும் அழிந்து விட்டன. இந்நூல்நிலையம் டில்லி செகரிட்டிரியேடின் தென் பாரிசத்திலிருக்கிறது. சனிக்கிழமைமாலை 3மணிக்குப்புத்தகங்களிலிருந்து புகை கிளம்புவதைக் கண்ட பக்கத்து அறையிலிருந்த போலீசார் தீ அணைக்கும் படையினருக்கு இச்செய்தியை அனுப்பினர். ஆனால் அவர்கள் வருவதற்குள் இவர்களே தண்ணீர் தூக்கிகளின் உதவியைக் கொண்டு தீயை அணைத்து விட்டனர். இதனால் கட்டடத்திற்குச் சேதமில்லாவிட்டாலும் பல புத்தகங்கள் அழிந்து பட்டன. தீ பிடித்ததின் காரணம் இன்னும் புலனாக வில்லை.

ㅇ ㅇ ㅇ

ஆந்திர பல்கலைக்கழகஉபஅத்தியக்ஷகர் சர் எஸ். இராதாகிருஷ்ணன் சர்வதேச மகா சபையின் அறிஞர்களின்கூட்டுறவு கமிட்டிக் கூட்டத்திற்குப்பிரதிநிதியாக சென்ற சனியன்று பம்பாயினின்றும் ஜினிவா செல்கிறார். சர். இராதாகிருஷ்ணன் ஜூலை 28,29ந்தேதிகளில்பாரீஸ் பல்கலைக் கழகத்திலும் ஜூலை முதல் வாரத்தில் லண்டனிலும், எடின்பரோவிலும், ஆகஸ்டு மாதத்தில் ரோமா புரியிலும் இந்திய வேதாந்தத்தைக் குறித்துச் சொற்பொழிவு நிகழ்த்துவார். இந்தியாவுக்கு ஆகஸ்டு மாதம் 7-ந் தேதி திரும்புவார். லண்டனில் தங்கியிருக்கும் காலத்தில் பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்திலுள்ள பல்கலைக் கழகங்களில் படிக்கும் இந்திய மாணவர்களின் குறைபாடுகளைக் கவனிப்பார்.

ㅇ ㅇ ㅇ

இந்திய அரசாங்கம் ஆகாயத்தபாலில் கார்டுகளை இப்பொழுது அனுமதிக்கத் தீர்மானித்திருக்கின்றது. ஏற்கனவே லண்டனுக்கு கார்டுபோட 1½ அணா லேபிள் ஒட்ட வேண்டும். இப்பொழுது அத்துடன் (ஆகாய மார்க்கமாகச் செல்லுவதால்) அதிகப் படியாக 2½ அணுவுக்கு லேபிள்வாங்கி ஒட்ட வேண்டும். அத்துடன் ஆகாயத் தபாலுக்கு அடையாளமாகிய நீலநிற லேபிளும் ஒட்டப் படவேண்டும். பொது ஜனங்களின் சௌகரியத்தை முன்னிட்டு நாலணுவிற்கு, நீலநிற லேபிளுடன் கூடிய தபால் கார்டு முக்கிய தபாலாபீசுகளில் விற்கப்படும். அவைகள் டில்லியிலிருந்து காராச்சிக்கு ஆகாயக் கப்பலில் கொண்டு போகப்படும். அவைகளிலுள்ள நீலநிற லேபிளில் "இந்தியா - லண்டன்" எனக் குறிக்கப் படவேண்டும்.

ㅇ ㅇ ㅇ

வேலையில்லாத் திண்டாட்ட நிதியைக் குறித்து விசாரிக்க இங்கிலாந்தின் அரசாங்கம் நீதிபதி கிரிகரி தலைமையில் எண்மர் கொண்ட ஓர் அரசியற் கமிஷனைநியமித்திருந்தது. அவர்களுள் நீதிபதி கிரிகரியும் மற்ற வரில் நால்வரும் சேர்ந்து முன் அறிக்கையை வெளியிட்டிருக்கின்றனர். அவ்வறிக்கையின் படி நிதி நடத்தப்பட்டால் ஆண்டிற்கு 419 லட்சம் பவுன் செலவிற் குறையுமாம். ஆனால் அவ்வறிக்கைக்கு மாறுபட்டு அவர்களில் இரு தொழிற்கட்சியினர் அவ்வாறு செய்வது சரியல்லவென்று குறிப்பெழுதி யிருக்கின்றனர். அவர்கள் மாறுதலெதுவும் செய்யக்கூடாதென்றும் நிரமையாக நிதியை நிர்வகித்துவரவேண்டுமென்றுங்கூறுகின்றனர். ஆனால் அறிக்கையின்படியோ நிதியிலிருந்து வேலையில்லாதவர்களுக்குக் கொடுக்கப்படும் தொகையையும், காலத்தையும் 100க்கு 50 வீதம் குறைக்கவேண்டியிருக்கின்றது. அறிக்கையை ஆதரித்துக் கன்சர் வேடிவ் பத்திரிகைகளும், எதிர்த்துத் தொழிலாளர்பத்திரிகைகளும் எழுதியிருக்கின்றன. ஆனால் இவ்வறிக்கை முன்னறிக்கையே யன்றி முடிவான அறிக்கையல்ல.

ㅇ ㅇ ㅇ

எல்லைப்புற காந்தி அப்துல் காபர்கான் சென்ற சனியன்று பார்தோலியில் முஸ்லீம்கள் மிகுந்த இடத்திலே திரு. தேவதாஸ் காந்தி தலைமையில் ஒரு பொதுக்கூட்டத்தில் பேசினர். அவர், அனைவரும் எல்லைப்புறத்திற்கு வரவேண்டுமென்றும், எல்லைப்புறத் தொண்டர்கள் அஹிம்சாதர்மத்தை முற்றும் கையாண்டு வருகிறார்களென்றும், அவர்கள் சற்று பிறழினும் தாம் தம் தலைமைப் பதவியை விட்டுவிடுவேனென்றும், காந்தியடிகள் அரசாங்கத்தை வற்புறுத்தி அனுமதி பெற்றுக்கொண்டெல்லைப்புறத்திற்குவிஜயம் செய்ய வேண்டுமென்றும், போர்சாத்வீரர்களின்தியாகத்தைக்கேள்வியுற்றுத்தாம் அவர்களை தரிசிக்கவே அங்குற்றதாகவும், மூஸ்லீம்கள் வரிகொடா இயக்கத்தில் ஊரை விட்டு வெளியேறுவிடினும் ஏலம் போடப்படும் சாமான்களையாவது வாங்காமலிருக்க வேண்டுமென்றும் கூறினர். திரு. தேவதாஸ் காந்தி தாமும் அப்துல் காபர்கானும் பஞ்சாபில் ஒரே சிறையில் வசித்ததாகவும், முன்னர் எல்லைப்புற மாகாணம் இந்தியாவிடம் எம்மனப்பான்மை கொண்டிருப்பினும் இனிமேல் நட்பையே கொள்ளுமென்றும் தாம் அரசாங்கம் அனுமதித்தால் எல்லைப்புற மாகாணத்திற்கு வருவதாகவும் மொழிந்தார்.

ㅇ ㅇ ㅇ

ஹுப்ளியிலுள்ள எம். எஸ். எம். ரயில்வே தொழிலாளர் சங்கப் பொதுக் கூட்டம் ஒன்று வெள்ளிக்கிழமை மௌல்வி மைதானத்தில் மாலை 4 மணிக்கு நடைபெற்றது. காரியதரிசியும் மற்றவர்களும், யாவரும் சங்கத்தில் சேர்ந்து ஒன்றுபட்டு நேரடியான வேலையில் இறங்க வழி தேடவேண்டுமெனப் பேசினார்கள். பிறகு எதிர்பாராத சில அசந்தர்ப்பங்களை முன்னிட்டு ரெயில்வே கூலிகள் வேலைக்கு வராமல் நின்றால் அதற்காக ஏற்பட்டிருக்கும்நிர்ப்பந்தம் அநியாயமாக விருப்பதாகவும், அவற்றை ஏஜண்டு உடனே நீக்க வேண்டு மென்றும் ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. மைசூர் அரசாங்கத்தார் ஸ்ரீமான் வி. வி. கிரிக்குத் தடை உத்தரவு பிறப்பித்ததைக் கண்டிப்பதாகவும், மைசூர் ரயில்வே தொழிலாளர்கள் தங்கள்கோரிக்கை பூர்த்தி செய்யப்படும்படி வெற்றியுடன் போராடியதற்காக அவர்களைப் பாராட்டுவதாகவும் ஹுப்ளி தொழிற்சாலை மானேஜர் தொழிலாளர்கள் தாங்களாகவே விலகுவதற்குஏற்படுத்திய நிபந்தனைகளை அங்கீகரிக்கக்கூடியதாகவில்லை யென்றும், பெரம்பூர் தொழிற்சாலையில் செய்யப் பட்டது போன்ற ஏற்பாடுகள் இங்கும் செய்யப்பட வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

ㅇ ㅇ ㅇ

கான்பூர் கலக விசாரணைக் கமிட்டியின் அறிக்கையும் அதன் மேல் ஐக்யமாகாண அரசாங்கத்தினர் எடுத்துக்கொண்டிருக்கும் நடவடிக்கைகளும் இப்பொழுது வெளியாயிருக்கின்றன. சட்டமறுப்பு இயக்கம், கடையடைப்பு, தன்வலிம் இயக்கம், சுத்தி சங்காதன் இயக்கம் இவைகள் முஸ்லீம்களையும் ஹிந்துக்களையும் வேறுபடுத்திவிட்டனவென்றும், பகத்சிங் தூக்குதண்டனை ஹர்த்தால்தான் கலகத்திற்குக் காரணமென்றும், ஆனால் காங்கிரஸ் வாதிகள் அதை வகுப்புக் கலகமாகச் செய்ய விரும்பவில்லையென்றும் அறிக்கையினின்றும் தெரிகின்றன. மேலும் போலீசுப் புலிகளும், ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டும் ஆரம்பத்திலேயே கடுமையான நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டிருந்தால் கலகம் ஆதிலேயே அடங்கிவிட்டிருக்கு மெனவும் இதற்குக்காரணமான அவர்களை விசாரித்துத் தண்டனை அளிக்கவேண்டுமென்றும் அதில் கூறப்பட்டிருக்கின்றன. அரசாங்கத்தினர், குறிப்பிட்ட ஐரோப்பிய ஜில்லா மாஜிஸ்ட்ரேட்டை வேறு ஸ்தலத்திற்கு மாற்றிவிட்டு, அவர் அறியாமையினாலேயேதான் கடுமையான முறைகளை அநுஷ்டிக்க வில்லையென்றும், போலீஸ்காரர்களை இலாகா மூலம் விசாரிப்பதாகவும் தீர்மானித்திருக்கின்றனர். தவிர பணமுடையினாலேயே அரசாங்கத்தினர், அதிகமாகப் போலீசுக்காரர்களைக் கான்பூருக்குக் கலகத்தின் போது அனுப்பமுடியவில்லையெனத் தெரிவித்துக் கொண்டிருக்கின்றனர்.

ㅇ ㅇ ㅇ

இந்திய ஊழியர் கழகத்தின் 26-ம் ஆண்டு விழா, தலைவர் ஸ்ரீ தேவதாரின் தலைமையில் புனாசரில் சென்ற வெள்ளியன்று நிகழ்ந்தது. அது சமயம் பண்டிதமாளவியா அழைப்பின்பேரில் ஆங்குற்று தாம் தம் நண்பர் ஸ்ரீ கோகலேவுக்கு நன்றி செலுத்தவே அங்குற்றதாகவும், ராவ்பகதூர் காலே கோகலே அரசியல் பொருளாதார தத்துவ ஆராய்ச்சிக் கழகம் நிறுவ இலட்சம் ரூபாய் அளித்திருப்பது போன்று யாரேனும் ஸ்ரீ நௌரோஜி, ஸ்ரீ. ரானடே முதலியவர் ஞாபகார்த்தமாய்ப் பணம் உதவவேண்டுமென்வும் கூறினர். காந்தியடிகள் தாம் வரமுடியாமைக்கு வருந்தி அனுப்பிய தந்தியில் அனைவரும் ஒரே ஆசானைக்கொண்டவராதலால் அபிப்பிராய பேதங்களிருப்பினும் இருவர் மனமும் ஒன்றாகவே இருப்பதாகவும், தாம் அங்குறாததால் தான் தன்னை வேறுபடுத்திக் கொள்ள விரும்புவதாக எண்ணவேண்டாமென்றும் குறிப்பிட்டிருந்தார். தலைவர் ஸ்ரீ. தேவதார் வட்டமேஜை மகாநாட்டில் ஊழியர் கழகத்தின் உறுப்பினர் மகா கனம் சாஸ்திரியாரும், திரு. ஜோஷியும், ஸ்ரீ. வேசும் உழைத்தார்களென்றும், காந்தி-இர்வின் உடன்படிக்கை நாட்டில் அமைதியை ஏற்படுத்தியதற்குக்களிப்புறுவதாகவும் இரண்டாம் மகாநாடு நாட்டில் நிரந்தர சமாதானத்தை நிலைவச் செய்யுமென்று நம்புவதாகவும், அனைவரும் கிராமப் புனர்நிர்மாணத்தில் ஈடுபடவேண்டுமென்றும், அங்கத்தினர்கள் முன்னைவிட அதிக ஊக்கத்துடன் ஊழியம் செய்யவேண்டுமென்றும் கூறினர்.



## வரவு செலவும்-நிதியும்

### அதிகாரம் IV

பிள்ளை:— செலவு செய்வதில் சிலபாகம் சாமான்களிலும், சிலபாகம் உத்தியோகத்தினர்களுக்குச் சம்பளம் கொடுப்பதிலும், சில பாகம் போக்கு வரவுச் செலவிலும், சொற்ப பாகம் வியாபாரிகளின் இலாபத்திற்கும் போகின்றன. அரசாங்கம் அநேக கோடி ரூபாய்களில் இலக்ஷக்கணக்கான உத்தியோகத்தினரையும், கோடிக் கணக்கான சாமான்களையும் விலைக்கு வாங்கி உபயோகப் படுத்த வேண்டி யிருக்கிறதல்லவா? இதன் மூலமாய் மற்ற முள்ள தொழில்களின் செழிப்பும் தங்கியிருக்கிறது. வியாபார ஒழுங்கும் இதைத் தழுவியே நிற்கின்றது. இவைகளை நிதானஞ் செய்தல் அவசியமில்லையா? உத்தியோகத் தினர்களுக்கு உயர்வான அந்தஸ்துள்ள சம்பளங்கள் கொடுக்க, அவர்கள் மிதமிஞ்சிய செலவு செய்ய நேரிடாதா? அப்போது அன்னிய நாட்டு டம்பத்தொழில்கள் விருத்தியாகாவா? இதன் மூலமாய் நம்தேசப் பணம் அன்னிய நாடுகளுக்குச் செல்லு மல்லவா? அரசாங்கம் மிதமிஞ்சிய சம்பளம் கொடுக்கவே, பிற தொழிலாளர்களுக்கும் அம்மாதிரிச் சம்பள விகிதம்கொடுக்க நேரிடும். அச்சமயத்தில் சில தொழில்கள் செழிக்கலாம்; சில தொழில்கள் இலாபமில்லாமலிருக்கும்; மற்றும் சில கெடும். அவ்விதமின்றித் தொழிலாளிகளின் சம்பள விகிதம் குறையுமாயின் நல்ல சாமர்த்தியமும் ஒழுக்கமுமுள்ள தொழிலாளிகள் அத்தொழில்களில் புகாமல் அவை செழிப்பாய் வளரா. மேலும் உயர்தரப் பட்ட சம்பள விகிதம் கிடைப்போர் ஜன சமூகத்தில் தனிப்பட்ட ஒரு ஜாதியினராய், எல்லா விவரங்களையும் தங்களிஷ்டம் போல் நடத்த முயல்வர். அப்போது ஜன சமூகத்திலுள்ள மற்ற முள்ளோர் இவர்கள் இஷ்ட காரியங்களையும், இவர்களுக்குப் பிரியமான காரியங்களையும் செய்வர். இதனால் ஏற்றத்தாழ்வு படிப் படியாய் பலவகைப்பட்டு ஜனசமூகம் சீர்கேடு அடையும். சம்பள விகிதம் குறைவா யிருந்தாலோ, மகா அறிவாளிகள், உயர்வான ஒழுக்க முள்ளவர்கள், தேசஅபிமான முள்ளவர் இவ்வுத்தியோகத்திற்கு வரமாட்டார்கள். இதனால் அரசாங்க நிர்வாகம் சிறந்தவழிகளில் நடப்பமாய்நடவாது. நிர்வாகக் கேடு ஜனசமூகச் சமாதானக் குறைவையும் அதிருப்தியையும் உண்டு பண்ணும். ஆகையால் சம்பள விகிதம் நிதான மாயிருக்கவேண்டும். அந்நிதானமே நாட்டுச் செழிப்பை அதிகப் படுத்தும்.

முதலியார்:— பிள்ளையவர்கள் சொல்லிய விஷயம் மிகவும் முக்கியமானது: மிக உயர்ந்த சம்பளத்திலே சிலர் பெரிய மகத்தான வேலையைச் செய்ய ஒப்புக் கொள்வாராயின், அவரின் உதவி அரசாங்கத்துக்கு அவசியமெனத் தோன்றினால் அப்பேர்ப்பட்டவரை ஒரு வருஷத்திற்கோ இரண்டு வருஷங்களுக்கோ நியமித்துக் கொள்ளலாம். சில மகான்கள் தம் செலவை அரசாங்கம் ஒப்புக்கொள்ளுமாயின், அவர்கள் தேசாபிமானத்தாலே அரசாங்கத்தார் இடும் வேலையைச் செய்ய முன்வருகிறார்கள். அவர்களுக்குப் பணம் பிரதானமில்லை. நாட்டுச் சாமான்களைக் கொண்டே அரசாங்கக் காரியங்களை நடத்தவேண்டும். அவ்விதமில்லாமல் அந்நிய நாட்டுச் சாமான்களை உபயோகிப்பதால் இலாபமென்ற ஓர் எண்ணத்தைமட்டுமின்றி மற்றும் பலவிதங்களில் அவைகளை உபயோகிப்பதில் விசேஷ நன்மையுண்டென்று தோன்றினால் அப்போது மிக ஜாக்கிரதையாய் அன்னிய நாடுகளோடு விசேஷ கட்டு கொண்டு நம் நாட்டின் செழுமை சிறிதுங் குறையாத வழிகளில் அவைகளை இறக்குமதி செய்யவேண்டும். கூடியவரை நம் நாட்டுப் பணம் அந்நிய நாட்டிற்கு அதிகமாய்ச் செல்லும் வழிகளில் செலவைநடத்தலாகாது. ஏனெனில் அந்நிய நாட்டினர் அவைகளுக்குப் பதிலாய் நம் நாட்டுச் சாமான்களை வாங்குவர். அப்போது அது தேசத்திற்கு வேண்டியதை விட மிகுதிப் பொருள்களாயிருப்பின் கெடுதல் குறைவு. தேசத்திற்கே போதாத பொருள்களாயிருப்பினும், அப்பொருள்கள் இன்றியமையாதனவா யிருப்பினும் விலை வாசிகள் உயரும். ஏழைகள் கஷ்டமடைவர். கைத்தொழில்கள் பல விருத்தியடையா. அரசாங்கம் நாட்டுச்சாமான்களை உபயோகிக்கும்போதும் அவைகளைப் போதிய அளவிற்கு மேல் கிடைப்பதற்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்த பின்னரே வேலைகளைத் தொடங்கவேண்டும். இதேமாதிரி சொற்ப காலங்களுக்கு வேலையாட்களை நியமிப்பதிலும் விசேஷ கவனமெடுக்கவேண்டும். ஜனங்கள் விசேஷமாய் ஓய்வின்றித் தொழில்களைச் செய்துகொண்டிருக்கும்போதும் விலைகள் உயர்வாயிருக்குங் காலத்திலும் பாங்கிகளில் பணம் பிச்சமாயிருக்கும் காலங்களிலும் பெரிய காரியங்களைத் தொடங்க சௌகரியமில்லாத சமயத்திலும் அரசாங்கம் சில கண்டிராக்டர்களும் வர்த்தகர்களும் விசேஷ இலாபமடையும்வழிகளில் பொருளைச் செலவிடக்கூடாது; பலர் கூடிய சங்கத்தாரோ அல்லது கிராம, நகர பொது ஜனங்களோ இலாபம் அடையுமாறு செய்தல் நலம். உதாரணமாக ஒரு கூட்டுறவுத் தொழிற்சாலை யூனியன் போலீசுக்கு வேண்டிய பூட்சுகளைச் சப்ளை செய்வதாக ஒப்புக்கொள்ளுமாயின், அதையே அரசாங்கம் ஆதரிக்கவேண்டும்.

அய்யங்கார்:— நீங்களிருவரும் சொல்வதை நான் முற்றும் ஆமோதிக்க முடியாது. நீங்கள் சொல்வது குறுகிய வழியாயிருக்கிறது. உயர்ந்த சம்பளம் கொடாமல் உயர் வொழுக்கமுள்ளவர் அரசாங்கத்தில் உத்தியோகஞ் செய்ய வரமாட்டார். பெரிய ரயில்வேபோடும் தொழில், எஞ்சினீரிங் தொழில் முதலியவை மகா நுட்பமானவை. இவைகளை ஜனங்கள் பலர் முதல் சேகரித்து வைக்கும் கம்பெனிகளிடமே விட வேண்டும். நம் நாட்டுச் சாமான்களை விட அந்நியநாட்டுச் சாமான்கள் இலாபமாயும், உறுதியுள்ளனவாயும், அழகாயுமிருக்குமாயின், அவைகளை உபயோகிப்பதே நலம். அன்னிய நாட்டாரோடு நாமும் பழகி, நம் தொழில்களையும் அபிவிருத்தி செய்ய முயற்சிக்கவேண்டுமேயன்றி அரசாங்கத்தின் உதவியால் மட்டுமே இவை செழித்துவிடுமோ? எல்லா நாட்டினரது சிறப்புகளையும் நாம் மெச்சி, அவர்களைப்போலாக நாம் உழைக்கவேண்டுவது அவசியம். வேண்டுமாயின் அத்தேசத்து அறிஞர்களின் உதவியையும் நாம் எவ்விதப் பணத்தைக் கொடுத்தாவது பெற உத்தேசிப்பதே நலம். ஓர் எஞ்சினீர் கோடிக்கணக்கான பணம் இலாபம் வரும்படி சில யுக்திகளைச் செய்து பெரிய பெரிய அணைகளையோ, ஏரிகளையோ, வாய்க்கால்களையோ, ரயில்வேக்களையோ ஏற்படுத்த முடியும். அதே காரியம் வேறொருவரால் முடியாததாயிருக்கலாம். தேசாபிமானமென்ற ஓர் எண்ணத்தோடு எத்தனை வழிகளில் எத்தனை தடைகளுடன் வேலை செய்வது? கூடியவரை நல்ல விஷயங்களை யாரிடமிருந்தும் பெறலாம். அதனால் ஒரு நஷ்டமுமில்லை. தற்காலத்தில் நஷ்டமாகத் தோன்றினும் பிற்காலத்தில் நன்மையாகவுமிருக்கலாம். மேலும், சாஸ்திரஞானம் பரவிவரும் இக்காலத்தில் நம் நாட்டிலே, 'நம் நாட்டார் ஆகாயவிமானத்தை நம் நாட்டுச் சாமான்களைக் கொண்டேசெய்து உபயோகப்படுத்தும்வரை நாம் அதைப் பார்க்க மாட்டோம்' என்று சொல்வது எவ்வளவு குறைவாகவிருக்கிறது!

நாயுடு:— பல தேசங்களிலே நூலாராய்ச்சிகளின் பயனாக அநேக தொழில்கள் இலாபமாக நடைபெற்று அன்னிய நாடுகளில் அவைகளால் ஏற்பட்ட சாமான்கள் விற்கப் பட்டு வருகின்றன. இதனால் அத்தேசங்களில் செல்வம் செழித்திருப்பினும் சிலர் செல்வவான்களாகவும் பலர் ஏழைகளாகவுமிருக்கின்றனர். இவ்விரு திறத்தினருக்கும் எப்போதும் போராட்டமாகவே யிருக்கிறது. சில சமயம் இப்போர் கேவல நிலைமைக்குக் கூட வந்து விடுகிறது. அரசாங்கம் சிலரே பணக்காரர்களாகாத வழிகளில் செலவை ஒழுங்கு படுத்துதல் ஒரு தர்மமாகும். இது இருதிறத்தினருக்கும் நன்மை. ஏழைகளுக்கு அதிக வருமானம் வர அவர்களின் ஒழுக்கமும் ஆசாரமும் உயரும். இதனால்தேச சமாதானம் மேவிடும். தேச சமாதானத்தால் தொழில், வியாபாரம் நன்முறைகளில் நடைபெறும். அரசாங்கம் பெரிய காரியங்களை நிதானமாய்ச் செய்ய முடியும். ஒரு நன்மை பல நன்மைகளுக்கும் வழியைக் காட்டும். ஐயங்காரவர்கள் தேசத்தைப் பொதுவாய்ப் பாராமல் அவரவரிஷ்டப்படி விட வேண்டுமென்ற கொள்கையை ஆதரிக்கின்றனர். இதை நாம் ஒருக்காலும் ஆதரித்தல் கூடாது. உலக சமாதானத்தையும் பெருமையையும் விரும்புவோர் உலகத்திலுள்ள அனைவரும் நல்ல உயர்நிலை யடையும் உபாயங்களை ஆதரிக்க வேண்டும். இவ்விதம் செய்வதில் சில சமயம் அனுஷ்டிக்கும் முறையில் ஒவ்வொரு தேசமும் தம் தேசத்தி விருப்பவர் நல்ல நிலைமைக்கு வரும் வரை சில சிக்கனமான வழிகளில் நடப்பது அவசியமாகும்.

அய்யர்:— செலவைத் திட்டஞ் செய்யும் போதும் செலவு செய்யும் போதும் ஏழைகளையே விசேஷமாய் ஆதரிக்க வேண்டுமென்று சொல்கிற உங்கள் உபாயங்கள் எனக்கும் திருப்தியை யளிக்கின்றன. எவ்விதம் நிலத்தின் நீர் பூமியுள்ள வற்றை வளர்த்துப் பின்சூரிய வெப்பத்தால்ஆவியாகி மேகமாய் மாறிமழைபொழிவதன் மூலம்மீண்டும் நீராகப் போந்து நில முடையார்க்கு உதவுகிறதோ, அதே போல் வருமானத்தில் ஒரு சல்லியும் விரயமாகாமல் மேலும் மேலும் விருத்தியடையச் செய்யும் வழிகளில் செல்ல வேண்டும். இந்தத் தர்மத்தை மேற்கொண்டே ரகுமகாராஜன் கப்பமாக வந்த பொருள்களை யெல்லாம் நல்வழிகளில் செலவு செய்ததுமன்றி, தம் அரண்மனையிலிருந்த உயர்ந்த பொருள்களையும் தானமாகக் கொடுத்துத் தாம் குடும்பத்தாரோடு ஏழையைப் போல் காலம் கழித்து வந்தாரெனச் சொல்லப்படுகிறது. அநேகதர்மமார்க்கங்களை அநுசரித்து சர்வ ஜனமும் எல்லாத் துறையிலும் உயர் நிலையை அடையும்படி செய்தல் ஞானிகளின் கருத்து. சமத்துவம், சகோதர பாவம், தடையின்றி எதையும் செய்யவும், பேசவும் உரிமை கைகூடும். ஏழை பணக்காரர்; வித்வான், அறிவீனன், ஒழுக்க முடையோன், துஷ்டன், ஆசைபுள்ளோன், தர்மிஷ்டன் இவர்கள் ஒருக்காலும் சிநேகமாய் நடத்தல் முடியாது. இவ்விதபேத மிருக்கும் வரை உலக சமாதானம் குறைவே. அரசாட்சி முறைகளும் ஒழுங்காயிரா. அன்னிய நாட்டுப் பொருள்களை உபயோகித்தலைப் பற்றிச் சில ஆக்ஷேபனைகள் தோன்றுதல்சரியே. ஒருதேசத்தின்செழிப்பு விசேஷ உயர்வடைந் திருப்பின், அன்னிய நாட்டுப் பொருள்களை இறக்குமதி செய்யலாம்; நம் நாட்டுப் பொருள்களை ஏற்றுமதியும் செய்யலாம். அதனால் வரும் இலாபநஷ்டம் நம் நாட்டு க்ஷேமத்தை ஒரு வழியிலும் பாதியா மலிருக்கும். ஒரு தனவானுக்கு ரூபா 100 நஷ்டம் வரினும் ரூபா 150 இலாபம் வரினும் அவை அவரை எவ்விதத்திலும் பாதியா. அந்நிலைமை வரும்வரை மிக எச்சரிக்கையாக ஏற்றுமதி இறக்குமதி செய்ய வேண்டியது அவசியம். அரசாங்கத்தார் ஏற்படுத்துகிற சம்பள விகிதம் தேசக்ஷேமத்தை மட்டு மன்று, உலக நன்மையையே நாடி நிற்கவேண்டும். ஒரு தேசத்துப் பழக்க வழக்கம் பலதேசங்களிலும் பரவுமாகையால் ஒழுங்கான பழக்க வழக்கத்தை வளர்க்கும் வழியில் எல்லாத் திட்டங்களும் அமைய வேண்டும்.

கே. எஸ். முத்துசாமி.

## கந்தர் அநுபூதி

சென்னை, இராயப்பேட்டை, வேத ப்ரவசன மந்திரத்ந ஸ்ரீமத் சிவத்தியானனந்த மஹரிஷி எழுதியது :—

### தவம்பெற

காளைக் குமரேச னெனக் கருதித்
தாளைப் பணியத் தவமெய் தியவா !
பாளைக் குழல்வள்ளி பதம் பணியும்
வேளைச் சுரபூ பதிமே ருவையே. 22.

### அந்வயம்

பாளைக்குழல் வள்ளி பதம்பணியும்வேளைச் சுரபூபதி மேருவை (ஏ) காளைக் குமரேசன் எனக் கருதித் தாளைப் பணியத் தவம் எய்திய வா(று என் !) [(ஏ) அசை.]

### பொழிப்புரை

**தலைப்பு :** [ஈண்டு மணவாழ்க்கையில் நிற்போனின் பெருமையைத் தவமாகவும், அதுவன்றி 'முத்தனைய மூரலும் பவளவாய் இன்சொலும் முகத்திலகு பசுமஞ்சளும் மூர்ச்சிக்க விரகசன்னதமேற்ற இருகும்ப முலையின் மணிமாலை காலவைத்து எமை மயக்கி இருகண் வலையை வீசியே மாயா விலாச மோக வாரிதியில் ஆழ்த்திடும் பாழான சிற்றிடை மடந்தையர்கள் சிற்றின்பத்தில் ஆழும் போகியினது பெருமையை அவமாகவும் கருதுமாறு போதித்து, உண்மைத்தவம் இல்லற நிலையால் மாறுபடுவதன்று என்பதைக் காட்டவந்த மறை இது.] தவவாழ்க்கையை அடைய.

**செய்யுள் :** பாளைபோல் நீண்டு காணும் கூந்தலையுடைய வள்ளி நாச்சியாரது பாதங்களில் (அவரது அன்பைப்பெற) வணங்கிப் போற்றும் செவ்வேளும், தேவலகத்தினர்க்கு இறைவனான இந்திரனுடைய நிலைத்த வாழ்வுக்கு ஆதாரமாய் மகாமேருவை யொத்து அணையாய் நிற்பவருமான முருகக் கடவுளைக் காளைத் தன்மை வாய்ந்த குமாரப்பருவத்து ஈசனெனநினைந்து (பத்தினி வ்ருதமாகிய தவமே சிறந்ததென நினைப்பூட்டும் அவரது) பாதங்களில் வணங்கி நெறிப்படுதற்கான தவத்தை நான் அடைந்தவாறு என்ன ஆச்சரியம் !

### விசேஷக் குறிப்புகள்

சுரபூபதியை மேருவை என இரண்டு கருத்துக்கொண்டதாகப் பிரித்துக் காட்டும் உரையினும் சுரபூபதிக்கு மேருவை என நான்கன் தொகையாகக் கொண்ட பொருளே சிறப்புடைத்து. இம்மறையில் இருவர் மதம் கண்டிக்கப்படலாயிற்று. ஒன்று அறவறத்தாலேயே மோட்சமெனச் சாதிப்பாரது மதம். காளைக்குமரேசனெனத் தன் வழிபடு கடவுளைக் கருதுவோன் தானும் அக்காளைக் கௌமார நிலையை அவலம்பித்துப் பெறுவது அவ் வழிபாட்டின் சித்தியிலை. அதனுல் மணநிலை அல்லது மனை வாழ்க்கையில் நிற்கும் நிலை சிறந்ததென அவனுக்கு நன்கு படவேண்டும். அப்படியன்றிக் காமாதுரனாய் லோகாயதத்தை அவ்வுபாஸகன் தழுவாமல், தன்னைக் காத்துக் கொள்ளுமாறு வேண்டிய முன் ஜாக்கிரதையை அவனுக்குப் புகட்டுமாறே 'சுரபூபதி மேருவை' என்ற அடை கொடுத்தது, என்? போக மாதரிடத்துத் தனது காளைப்பருவத்தைச் செலவிட்டுக் கெட்டழிபவனுக்கு ஏற்படும் அழிவுகள் பலவென்பதும். அவ்வழிவுகள் நேர்ந்தழி அக்காமவழிப்பட்டான் செயலற்றுப்பத்தினி விரதத்து ஒழுகும் காளைகளாகிய தெய்வங்களைத் துணைக்கொளப் புகுதல் இயல்பென்றும், இப்பத்தினி விரதர்களாலேயே இவ்வுலகமும் அதன் சமூகமும் தட்டழியாமல் நிறுத்தப்படவல்லன என்பதும், 'சுரபூபதி மேருவை' என்னும் சொற்றொடரால் நிலைநாட்டப்பெற்றன. இவ்வகையாகத் துறவறமென்னும் பொருந்தா அறத்தையும், பல்விழைச்சென்னும் கூடா ஒழுக்கத்தையும் கண்டித்து, அவற்றின் தாழ்வுகளை எடுத்துக் காட்டி, மணவாழ்க்கையின் உத்தம நிலையைப் போதித்து, அவ்வாழ்க்கையில் நின்றே முருகோபாஸனை செய்வதால்வரும் தவப் பயனையும் இம்மறையினுல் விளக்கினர். துறவறம் பொருந்தா அறம் என்பது என்னை? மாந்தர்க்கு இயல்பாகவுள்ள இந்திரியப் போக்கைக் கடவுளால் அம்மாந்தர்க்கென அமைத்து வைக்கப்பெற்ற மாதரது பண்டியில் சேர்க்க நினையாது நெறியல்லா நெறிகளில் அதனைக் கழிக்க முயல்வதால் என்க. பல்விழைச்சு கூடா ஒழுக்கமென்பது, "காணிற் குடிப்பழியாம் ; கையுறிற்கால் குறையும் ; ஆணின்மை செய்யுங்கால் அச்சமாம் ; நீள் நிரயத்துன்பம் பயக்குமால், அச்சாரீ, நீ கண்ட இன்பம் எனக்கு எனைத்தால் கூறு." என்பதனுல் வெளியாகும். இவ்விரண்டு நெறியல்லா நெறிகளை விடுத்து 'வரிந்துகொண்டு இன்பந்துய்த்தல் தவம்' எனக் காட்டிய குருநாதனது பாதங்களை வணங்கும் பேறிவாண்மை தனக்குக் கிடைத்ததற்காக உபஸாகன் மகிழ்ந்தபடி இது. அருணகிரிநாதர் இல்லற வாழ்க்கையோடிருந்ததாக நமக்குச் சரித்திரம் தெரியாதவரையில், இத்தகைய மறைகளை அவர் லோகோபகாரமாக உதவினுர் என்றுவது அல்லது பிறர் கண்டு இந்நூலிற் சேர்த்தாரென்றுவது கொள்ள வேண்டுமே யன்றி வேறு வழியில்லை.

## சீவன் முத்தர்கள்

(தொடர்ச்சி)

இவர்கள் ஜனங்களிடையில் வெளிப்படையாக வராமலிருப்பதற்குக் காரணம் என்னவென்றுல் ஜனங்கள் இவர்களைக்கண்டு சந்தேகமோ அருவருப்போ, அல்லது ஏதோ ஒருவகைத் துவேஷ எண்ணமோ கொள்வார்களானுல் அவைசீவன்முத்தரைத்தாக்கா. மற்று அவை, விட்டவர்களையே திரும்பித் தாக்கிக்கெடுதி செய்யும். இக்காரணத்தின் நிமித்தம் ஜனங்கள்மேல் கருணை கூர்ந்து வெளிப்படையாக அவர்கள் வராமலிருக்கிறூர்கள்.

"தம்மை இகழ்ந்தமை தாம்பொறுப்பதன்றி [மற்று
எம்மை இகழ்ந்த வினைப்பயத்தால்—உம்மை
எரிவாய் நிரயத்து வீழ்வர்கொல் என்று
பரிவதூஉம் சான்றோர் கடன்"

ஆனுலும் மாஸ்டர்களை அடுத்து உலகத் தொண்டுக்கு ஆளாக வேண்டுமென்பவர்களுக்கு அவர்கள் மறைவாகவில்லை.

### புகழ் விரும்பார்

இவர்கள் இறைவனுடைய உலக சேவையின்நிமித்தம் உலகில் வெளிப்படையாக வந்தாலும், இவர்களை இன்னுர் என்று கண்டுபிடிக்கமுடியாது. 1857ஆ இந்தியாவில் குழப்பம் சேரிடுவதற்குமுன் இந்திய தேச அரசர்கள் "லண்டன்" நகருக்குத் தூதாகப் போனபோது அக்கூட்டத்தில் மாஸ்டர் மௌரியாவை "ஹைடுபார்க்கில்" பார்த்திருக்கிறூர்கள். இன்னும் புதுவையில் மேடம் பிளவட்ஸ்கி உபந்யாசம் செய்து கொண்டிருந்தபோது ஒரு மாஸ்டர் சாதாரணக் கூட்டத்தோடு தாமும் உட்கார்ந்திருந்தார். மாஸ்டர் குதூமி சைனுவிற்குப்போகச் சென்னை வழியாய் வந்து அடையாறில் தங்கிப்போனுர்.

இவர்களைச் சாதாரணமாய்த் தெரிந்து கொள்ளும்படியான அறிகுறிகள் யாவும் இவர்களிடம் கிடையா.

"பாமரரெனக் காண்பிப்பார்பண்டிதத்திறமை
காட்டாரும ருமாவாருள்ளத்து வகையாஞ்
[சீவன்முத்தர்"

ஆனுல் இவர்களைக்கண்டு தரிசித்தவருக்கு ஒருவித சாந்தம், பெருந்தன்மை, புனிதம் இவை தட்டும். யாரோ ஒருபெரியாரண்டை இருந்ததாகப் பின்னுக்குத் தெரியும். இவர்கள் பேசுவது மிக அரிது. பேசினுல் விஷயம் எதுவோ அதைக் குறித்துத்தான் பேசுவார்கள். சொல்லும் வார்த்தைகள் ஒருவித ஆறுதலைத் தந்து அறிவையூட்டும்.

இவர்கள் அந்தந்த தேச உடை தரித்திருந்தாலும், பார்வைக்கு மிகச் சுதந்தரமாகக் குளிர்ந்த முகத்துடன் கருணை நிறைந்த பார்வையோடு இருப்பார்கள். இவர்களுக்குக் கர்மம் கழிந்து போயிருக்கின்றபடியால் தூல தேகம் ஆன்ம விளக்கத்தைப் பூரணமாகக் காட்டும் தேகத்தைப் பல காலம்வரை வைத்திருப்பார்கள். வேறு தேக மெடுத்தாலும் அதுவும் முன்தேகத்தைப் போலவே இருக்கும். இவர்களைக் கர்மபந்த மிழுப்பதில்லை ; மற்று இவர்களுடைய இஷ்டப்படி இறைவனுடைய சேவகத்திற்கு வேண்டிய இடத்தில் போய்ப் பிறப்பார்கள். அல்லது சிஷ்யர்கள் தயாரித்துச் சீர்ப்படுத்திய தேகத்தில் புகுந்து வேலை செய்வார்கள். சீவன் முத்தரைக் கண்டுபிடிக்க வேண்டுமானுல் ஒருவன் தனது காரண தேகத்தில் அதாவது சுழுத்தியில் அறிவுடன் விழித்துப் பார்க்கவேண்டும்.

### உலகைக் காத்தல்

இவர்கள் உலகைப் பலதுறைகளாக வகுத்து அத்தத்தம் துறைகளிலிருந்து மன்பதையாம் ஈசனது குழவியை முன்னுக்குக்கொண்டு வர சேவை செய்கிறூர்கள். இந்தியாவில் ரிஷி அகஸ்தியர் இறைவனுக்குப் பிரதிநிதியாக இந்தியாவைப் பார்க்கிறூர். திபெத்தில் மாஸ்டர் குதூமி குருபீடத்தைக் கவனிக்கிறூர். மாஸ்டர் மோரியா மனுபீடத்தைக் கவனிக்கிறூர். இமயமலைத் தென்சாரலில் குருக்ஷேத்திர மேட்டிற்கு நேர்வடக்கே பகவான் மைத்திரேயர் அறவாழி-அந்தணன்-வீற்றிருக்கிறூர். இவருடைய ஆசிரமத்திற்குப் பின்புறமிருக்கும் புராதனக் கல்மண்டபத்தில் வைவஸ்வத மனு - வாலறிவன் இருக்கிறூர். ஆசியா மைனர் தேசத்தில் லெபினன் எனும் மலையில் மாஸ்டர் ஜீஸஸ் கிறிஸ்து மதத்தை ஆதரிக்கிறூர். வெனிஸ் நகரத்தில் மாஸ்டர் வெனிஷியன் இருக்கிறூர். இவ்விதம் ஈஜிப்தில் ஒருவரும், கிரீஸ் தேசத்தில் மற்றொருவரும் ஹங்கேரியில் பிறிதொருவரும் இங்கிலாந்தில் இருவரும் இன்னும் மற்றத்தேசங்களில் பலருமாகப் பரவிச் சுமார் அறுபதுவரை அம்பலக் கூட்டமாக இருந்து இறைவனது சேவையைச்செய்கிறூர்கள்.

எவ்விதம் இங்கு அரசாங்க இலாகா ஒன்றிலிருந்து வேறு இலாகாக்களுக்கு அதிகாரிகள் மாற்றப்படுகிறூர்களோ அவ்விதமே சீவன் முத்தர்களையும் வேறு மண்டலங்களுக்கு ஈசுவரனுடைய சேவைசெய்ய மாற்றுவதுண்டு. தமது காலத்திலேயே ரிஷி துருவர் வேறு மண்டலத்திற்குப் போய்விட்டார். இங்குத் தேவையாயிருக்குமாகில் மற்ற மண்டலத்திலிருந்து முத்தர்கள் வருவதுண்டு. ஆகவே இவர்கள் தொகை அவ்வப்போது மாறும்.

### 'புத' மண்டலம்

இப்பூ மண்டலத்திலிருக்கும் மானிடவர்க்கம் இங்குப் படிக்கவேண்டிய பாடத்தைக் கற்றவுடன் "மர்க்குறி" எனும் புதன் மண்டலத்திற்குப் போகும். ஆகவே அம்மண்டலத்தை இப்போதிருந்தே இனி வருகிறவர்களுக்குத் தகுந்தபடி சீர்ப்படுத்தி வைக்க இங்கிருந்து சீவன் முத்தர்கள் முன்னதாகவே போயிருக்கிறூர்கள்.

இங்கு இருப்பவர்களில் சிலர் மதத்தைச் சீர்திருத்திக்கொண்டும் சிலர் கலைஞானத்தை விருத்தியாக்கிக் கொண்டும் இருக்கிறூர்கள். சர். வில்லியம் குருக்ஸ் பூத அணு தத்துவத்தைத் தமது அறையில் கதவைச் சாத்திக் கொண்டு ஆராய்ச்சி செய்தபோது கஷ்டப்பட்டு யோசிக்கையில் மாஸ்டர் ரகோவி தூலமாகப்போய் இன்னின்னபடி அடுக்கிப்பார் என்று காட்டிக் கொடுத்தார். ஜேம்ஸ்வாட் என்பவருக்கு நீராவி இயந்திரம் செய்ய மனதில் தூண்டினுர். அவ்விதமே எடிசன், பாசு முதலியவர்களுக்கு நினைவூட்டிக் கலைஞான அறிவைப் பெருக்கி வருகிறூர்கள்.

சிலர் குருமூர்த்தமாய்நின்று சிஷ்யர்களைப் பயின்று முத்திமார்க்கத்தில் நடப்பிக்க உதவி தருகின்றனர். இவர்களைத்தான் தியாசொபியில் மாஸ்டர்கள் என்று சொல்லுவது. மாஸ்டர்கள் என்றுல் உபதேசிப்பவர்கள், போதிப்பவர்கள் எனப்பொருள். மற்ற சீவன் முக்தர்களை அவரவர் முன்னேற்றப்படிக்குத் தக்கபடி சோஹான், மகா சோஹான், போதிசத்வர், மனு எனப் பெயரிட்டிருக்கின்றனர். எல்லோருக்கும் பூலோக சஞ்சார நிமித்தம் தூல தேகமொன்றுண்டு.

இவர்கள் விதேகமுத்தி அடையும்வரை தேகமிருக்கும்.

தி. மு. மா.

Edited & Published by T. V. Kalyanasundaran; Printed by T. V. Volaganathan at the Sadhu Press, 12, Ganapathi Mudali St., Royapettah, Madras.

